# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வெட்டவெளி இரகசியம் |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | உபதேசம் |
| முதற்பதிப்பு | : | 2020 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 139 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

ஓம் தத் சத்

# வெட்டவெளி இரகசியம்



**நூல் ஆசிரியர்**

**சுவாமி பிரபஞ்சநாதன்**

ஸ்ரீ குருப்யோ நம:

# வெட்டவெளி இரகசியம்

## 1. ரிஷிகளும், சித்தர்களும்

நம்முடைய சனாதன தர்மத்தின் மிகப்பெரிய சிறப்பே மெய்யறிவை அடைந்த மெய்ஞானிகள் என்ற **'ரிஷிகள்'** என்பவர்களும், **'சித்தர்கள்'** என்பவர்களும் என்றுமே அழியாத சாஸ்வதமான மெய் (உடல்) என்பது வெட்டவெளிதான் என்பதை அறிந்து, அதற்கான சாதனமாக இந்த அழியக்கூடிய மனித பரு உடலைக் கொண்டே, அந்த மகத்தான மெய்ப் பொருள் இரகசியத்தை அறிவாகாஷமாக தங்கள் அனுபவத்தில் உணர்ந்தார்கள்.

அத்தகைய ரிஷிகளை, சித்தர்களை **"மந்த்ர திருஷ்டாக்கள்"** என்றுதான் அழைக்கப்பட்டனர். அவர்கள் இந்த வெட்டவெளியின் பிரமாண்டத்தை, இரகசியத்தை ஒளி அலைகளாக உணர்ந்து அறியும் ஆற்றல் பெற்றவர்கள் என்று இதற்குப் பொருளாகும்.

அதாவது, வெட்டவெளியின் இரகசியங்களைத் தன்னுள் கண்டார்கள் (த்ருஷ்ட: - பார்த்தல்) என்றுதான் இங்கு

கூறப்படுகின்றதே தவிர கேட்டார்கள் என்று கூறப்படவில்லை. எனவே, அவர்கள் அறிவை அறிவால் அறிந்தார்கள் என்று அறிந்துக் கொள்ள வேண்டும்.

இதை இன்றைய நவீன விஞ்ஞானம் தன் உடலின் உள்ளே உள்ள சிதாகாசத்தை (அறிவாகாசத்தை) தேடாமல், தனக்கு வெளியே மகாகாசத்தில் தேடிக்கொண்டிருக்கின்றது.

அந்த வகையிலே, இன்றைய விஞ்ஞானம் க்வாண்டம் (Quantum) உலகில், பொருட்கள் முதன் முதலாக, தங்களது நுண்ணிய துகள் தன்மையை மட்டும் வெளிப்படுத்துவதாய் இல்லாமல், அத்துடன் அலைப்பண்புகளையும் வெளிப் படுத்துவதாய் அமையப் பெற்றுள்ளது என்பதை அறிந்து அவைகளைப் பற்றிய ஆராய்ச்சியில், அந்த பேரறிவை, அறிவுப் ப்ரகாஷத்தை, ஒளி அலைகளை வெட்ட வெளியில் வெளியே தேடிக் கொண்டிருக்கின்றனர்.

அதாவது பொருட்களின் அலைப் பண்பும், துகள் பண்பும் சங்கமமாகும் ஒரு பொது இடமாய் இந்த பிரபஞ்சம் அவர்களுக்கு காட்சியளிக்கிறது.

ஆனால், நம் மெய்ஞ்ஞானிகளோ, அந்த ஒளி, அலைகளை தங்கள் உள்ளே கண்டு மந்திரங்களாகப் படைத்து, செய்யுள் வடிவிலும், சூக்தங்களாகவும் அமைத்துப் பாடி வைத்தனர்.

அவர்கள் அடைந்த அந்த மெய்யறிவை வட மொழியில் (சமஸ்க்ருத மொழியில்) கூறுபவர்களை **'ரிஷிகள்'** என்றும், தென் மொழியில் (தமிழ் மொழியில்) கூறுபவர்களை **'சித்தர்கள்'** என்றும் அவரவர்கள் பாஷையில் அழைக்கப் பட்டனர்.

சித்தர்கள் என்றால், **'சித்'** என்ற அறிவை அனுபவமாக அறிந்தவர்கள் என்பதுப் பொருள். அதாவது, சித்தத்தை (மனதை) அறிந்தவர்கள் சித்தர்கள் எனலாம்.

எனவே, ரிஷிகள் என்றாலும், சித்தர்கள் என்றாலும் ஒன்றே. இது மொழியால் மாறுபடுகின்றதே தவிர, அறிவால் இருவரும் ஒன்றே என்பதை அறிந்து, நாம் தமிழ் மொழியில் உள்ள சாஸ்திரங்களையும் அறிந்துக் கொள்வது என்பது, மொழிகளினால் உள்ள பேதமை நீங்கி, இருமைகள் அற்ற நம் உண்மை இயல்புக்கு இனிதாய் வருவதற்கு சாதகமாக இருக்கும்.

அத்தகைய தமிழ் சித்தர்களை இன்றைய தமிழர்களால் வைத்தியர்களாகவே பார்க்கப்படுகின்றார்கள். ஒரு வகையில் அவர்கள் வைத்தியர்கள்தான், அழியக் கூடிய உடல் பிணிகளை நீக்கும் வைத்தியர்கள் என்பதைவிட, அழியாத உடலை காட்டிக் கொடுக்கும் பிறவிப் பிணிப் போக்கும் வைத்தியர்கள் எனலாம். பிறவிப் பிணித் தீர்க்கும் மருந்தை, அந்த அறிவை அறிந்த சித்தர்கள் நம்முடைய தமிழ் மொழியிலே பல்வேறு மெய்ஞ்ஞான இரகசியங்களை நமக்குத் தந்து விட்டுச் சென்றுள்ளனர்.

இந்த புவியில் சிருஷ்டிக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான ஜீவராசிகளுள் மனிதனாய் பிறப்பது என்பது மிகவும் அரிது. அதனிலும் கூன், குருடு, செவிடு, பேடு, நீக்கி பிறத்தல் என்பது மிகவும் அரிது, அதனிலும் சம்ஸாரத்திலிருந்து விடுதலை, ஜிவகாருண்யம், பரோபகாரம் முதலியவைகளை அடைவது என்பது மிக, மிக அரிது.

இவ்விதம் மனிதர்களாகப் பிறந்தவர்கள், பெற்ற இந்தப் பிறவியை வீணாக்காமல், பிறவாப் பெரு நிலையை அடைவதற்கான அரிய சாதனமாக இந்த மனித உடல் கிடைத்திருப்பது மிகப்பெரிய பாக்கியமாகும்.

அப்படி கிடைத்த இந்த மனித உடலிலே, இந்த ஆறு அறிவுகளும் முறையாக வேலை செய்வது என்பது அரிதிலும் அரிது.

ஆனால், அந்த அரிதான உடலோ, இளமை, இன்பம், நோய், மூப்பு மற்றும் மரணம் என்னும் இந்த ஆறு நிலைகளை அனுபவமாக அடைகின்றது.

இவற்றுள் மேலும் **இளமை, இன்பம், வீடுபேறு** என்னும் மூன்றும் அடைதற்குப் பெருந்தடையாய் உள்ளது **நோய், மூப்பு, மரணம்** என்னும் இந்த மூன்றுமே ஆகும்.

இந்த அரிதான மனித உடலையும், அதனைக் கொண்டு அதன் உள்ளே உள்ள மனதையும் ஆராய்ந்த சித்தர்கள் மகத்தான பல அரிய இரகசியங்களைக் கண்டறிந்து, இந்த உலகத்தின் நன்மையின் பொருட்டு அனைவருக்கும் கொடுக்க விரும்பினர்.

ஆனால், அது எளிதாக அவர்களுக்கு கிடைத்து விட்டால், அவர்களுக்கு அதன் மகத்துவம் தெரியாமல், அதனை அவமதிப்பார்கள் என்று கருதி, அத்தகைய மிக உயர்ந்த இரகசியங்களைப் பரிபாஷை பாடல்களாகப் பாடி வைத்து விட்டுச் சென்றுள்ளனர்.

அதுவும் அந்தப் பாடல்களுக்கு பொருள் புரிய வேண்டுமானல், அதற்கான சாதனைகளை, அவைகளை அறிய விரும்பும் சாதகன் கடைப்பிடித்து, அதன் வழி நின்று, அந்த உயர் இரகசியங்களை அறிய அடைய வேண்டும் என்ற அடிப்படையில் அவர்களால் கொடுக்கப்பட்டதே, இந்த **'யோகம்'** என்ற அஷ்டாங்க யோக வழி முறைகளாகும்.

அப்படி முறையாக இந்த யோகக் கலையைப் பயின்று வருகின்ற சாதகனுக்கு சித்த சுத்தி உண்டாகி, அதன் வாயிலாக ஞானம் என்ற அழியாத சொத்து அவனுக்கு கிடைத்து, அந்த சொத்தைக் கொண்டு, இந்த சித்தர் பாடல்களை பயன் படுத்தட்டும் என்று அவர்கள் அன்றே செய்து வைத்த சித்த வித்தைதான் இந்த சித்தர்களின் சிறப்பான பல சாஸ்திரங்கள் எனலாம்.

மேலும், இந்த சாஸ்திரங்கள் மனித சரீரத்தைக் கொண்டுதான் அடைய முடியுமே தவிர, மற்ற எந்த உயர்ந்த உடலில் பிறந்தாலும் அதனால் பயன் கிடையாது என்பதையும் அறிவோமாக.

## 2. உடலும், தத்துவங்களும்

அது எப்படி, மனித உடலை விட மிக உயர்ந்த உடல்கள் இருக்கின்றதா என்றால், இருக்கின்றது. அவைகள் நம் கண்கள் போன்ற புலன்களுக்குத் தெரியவில்லை என்பதினால், அந்த உடல்கள் இல்லை என்று ஆகி விடாது என்பதையும் அறியவும்.

இதிலே இவ்வாறு படைக்கப்பட்ட, இந்த மனித உடல் மதிக்கப்படுவதற்கு மகத்தான ஒரு மெய்ப்பொருள் அந்த, அந்த உடலின் உள்ளே மையம் கொண்டுள்ளது.

அதுவே இந்த உடல் இயங்குவதற்கு காரணமான, அந்தப் பொருளை **'உயிர்'** என்று உத்தமர்களால் அழைக்கப் படுகின்றது.

அந்த உயிரைப் பற்றி அறிந்துக் கொண்ட அறிய இரகசியங்களைத்தான் சித்தர்கள் பல்வேறு பரிபாஷைகளில் வெளிப்படுத்தி இருக்கின்றார்கள்.

அதை அறிந்துக் கொண்டவன் அவன் விரும்பும் பொழுது மட்டுமே, இந்த உடலை விட்டு விடுமாறும், அது வரை இந்த அழியக் கூடிய உடலை அழியாமல் தக்க வைத்துக் கொண்டு வாழவும் முடியும் என்ற மிக உயர்ந்த இரகசியங்களை இந்த மனித சமுதாயத்திற்கு கருணையால் வழங்கியுள்ளனர்.

ஆனால், அது அவ்வளவு எளிதாக அனைவருக்கும் கிடைக்காதவாறும் அதன் இரகசியங்களை ஒழித்து வைத்துப் பலப் பரிபாஷைப் பாடல்களாகக் கொடுத்துவிட்டுச் சென்று உள்ளனர்.

யாருக்கு தகுதி இருக்கின்றதோ, அவன் இந்த நூல்களைக் கற்று, அதற்கான அரிதான விசயங்களை அறிந்து, அவைகளை தன்னுடைய நடைமுறை வாழ்க்கையில் கடைப் பிடித்து, அழிகின்ற இந்த தேகத்தைக் கூட, பல காலங்கள் அழியாமல் தக்க வைத்துக் கொண்டு, நீண்ட நெடு நாட்கள் இந்த புவியில் மனித உடலுடன் வாழ்ந்து, இந்த மனித சமுதாயம் நன்மை பெரும் பொருட்டு உண்மையாக உழைக்கட்டும் என்று அவர்களால் கொடுக்கப்பட்டதே இந்த பிரபஞ்ச ரகசியங்களாகிய வெட்டவெளி இரசியம் எனலாம்.

இயங்காத இந்த ஜடமான உடல் இயங்க, அதனுள்ளே ‘**வெளி**’ இருந்தாக வேண்டும்.

ஆனால், அந்த வெளி உள்ளே நுழையும் எல்லா ஜடப் பொருட்களுமே இயக்கத்துக்கு வந்துவிடாது.

அப்படியானால், அந்த வெளி எதன் அடிப்படையில் இந்த ஜடப்பொருட்களில் இயங்குகின்றது என்பதை அறியும் முன்பாக, அந்த உடலுக்கு உண்டான ஐந்து அரிய அதி சூக்ஷும அற்புதப் பொருள்களை சித்தர்கள் எப்படி வெளிப்படுத்துகின்றார்கள் என்பதை மிகவும் சுருக்கிக் கூற வேண்டியது அவசியம் என்பதினால், அதற்கு அவர்கள் எழிதியுள்ள ஒவ்வொரு நூல்களில் குறிப்பாய் கூறியிருக்கும்

பற்பல பரி பாஷைகள் அல்லது இடு குறிகள் பின்வரும் விதமாக கீழே கொடுக்கப்படுகின்றன.

(1) பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், என்றும்

(2) மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, என்றும்

(3) பிரமா, விஷ்ணு, ருத்திரன், மயேஸ்வரன், சதாசிவன், என்றும்

(4) சிருஷ்டி, திதி, சம்ஹ்காரம், திரோபவம், அனுக்கிரகம், என்றும்

(5) அ, இ, உ, எ, ஒ, என்றும்

(6) ந, ம, சி, வ, ய, என்றும்

(7) ஐயும், கிலியும், சவ்வும், மவ்வும் ஸ்ரீயும், என்றும்

(8) கோட்டை, மதில், மலை, வச்சிரம், அண்டம் என்றும்

(9) கம்பியுப்பு, பாரையுப்பு, கல்லுப்பு, இந்துப்பு, வளையலுப்பு என்றும் இவ்விதம் பற்பல பாஷைகளாக நமக்குக் கொடுத்து உள்ளனர்.

# 3. ஆன்மாவும், தத்துவங்களும்

“**நான்**”, “**நான்**” என்று சொல்கின்ற வார்த்தையையே “**ஆத்மா**” என்று சாஸ்திரம் கூறுகின்றது.

ஆக “**நான்**” என்பது இந்த உடல் என்பதாக நாம் பொதுவாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், இந்த “**நான்**” என்பதை நாம் பயன் படுத்துகின்ற இடத்திற்கு ஏற்ப மாறுபடுகின்றது.

அதாவது, இந்த “**நான்**” என்பது சில நேரங்களில் உடலைக் குறித்தும், சில நேரங்களில் மனதைக் குறித்தும், சில நேரங்களில் புத்தியைக் குறித்தும், இன்னும் சில நேரங்களில் அறிவைக் குறித்தும் என பல அர்த்தங்களுடன் கையாளப் படுகின்றது.

ஆனால், இங்கு “**நான்**” என்பதை நாம் எந்த அர்த்தத்தில் உண்மையில் புரிந்து கொண்டுள்ளோம் என்று பார்த்தால், தவறாகவே அதை புரிந்து கொண்டு கையாண்டு வருகின்றோம்.

இந்த “**நான்**” என்பது உண்மையிலேயே அந்த சத்திய வஸ்துவான “**ஆத்மா**” என்பதை வேதாந்தம் மட்டுமே நமக்கு சாஸ்திரத்தின் வாயிலாக விளக்கமாக எடுத்துக் கூறி புரிய வைக்க முயற்சிக்கின்றது.

வேதாந்தம் உண்மையில் எங்கு தொடங்குகின்றது என்பதை அறிய முற்பட்டால், இந்த “**நான்**” என்பதற்கு உண்மையான வஸ்து ஒன்று உள்ளது. ஆனால், நாம் “**நான்**” என்ற சொல்லுக்கு உண்மையல்லாத ஒன்றையும் கலந்து புரிந்து கொண்டு உள்ளோம் என்பதை நமக்கு ஆரம்பத்திலேயே அறிவுறுத்துகின்றது.

இதை எப்படி அறிவது என்றால்,

எது என்னுடையது என்று கூறுகின்றோமோ, அது நிச்சயமாக “**நான்**” ஆக இருக்க முடியாது. எதை “**நான்**” என்று கூறுகின்றோமோ நிச்சயமாக அது என்னுடையதாக இருக்க முடியாது.

அப்பொழுது “**நான்**” என்று நினைத்துக் கொண்டி ருப்பதற்கு வேறாக, ஒன்று என்னிடம் உள்ளதால்தான் நாம் அதை இது என்னுடைய பொருள் என்றும், ‘**எனது**’ என்றும் கூறுகின்றோம்.

இந்த உடலை சில நேரங்களில் “**நான்**” என்று அழைக்கின்றோம். சில நேரங்களில் என்னுடையது என்றும் அழைக்கின்றோம். இதிலிருந்து “**நான்**” என்ற சொல்லில் நாம் புரிந்து கொண்டுள்ளதில் பல குழப்பங்கள் உள்ளது.

இப்பொழுது விசாரம் செய்து பார்த்தால் எது உண்மையான “**நான்**” என்று அறிய முற்பட்டால், “**ஆத்மா**” என்ற ஒன்று மட்டுமே “**நான்**” என்பதற்கு உண்மையான அர்த்தம்.

ஆத்மா = நான்.

அனாத்மா = நான் அல்லாதது.

ஆக, நான் அல்லாதவற்றை “**நான்**” என்றும், “**எனது**” என்றும், தவறாக கலந்து வைத்து புரிந்து கொண்டு உள்ளோம்.

ஆத்மா என்ற தத்துவத்தில், அனாத்மாவை நாம் கலந்து வைத்துக் கொண்டு குழப்பத்தில் உள்ளதால், தவறான வற்றை நீக்கி, சரியானவற்றை சுட்டிக்காட்ட வேண்டும் என்று சாதகனின் மீதுள்ள கருணையாலும், அன்பினாலும் மட்டுமே சாஸ்திரம் உண்மையை உபதேசிக்க விரும்புகின்றது.

இதற்காக சத்குருவின் வாயிலாக, சாஸ்திரமானது ஆத்மாவுடன் கலந்து உள்ள சிலவற்றை நமக்கு சுட்டிக் காட்டி, இது ஆத்மாவிலிருந்து எந்த வகையில் வேறுபட்டது என்பதை புரிய வைக்க முயற்சிக்கின்றது.

இந்த இரகசியங்களை அறிகின்ற பிரயோசனம் இரண்டு வகைப்படும் என்று சாஸ்திரம் விளக்கமளிக்கின்றது.

அவைகள்,

1. **பரமப் பிரயோசனம்**

2. **அவாந்தரப் பிரயோசனம்** என்பதாகும்.

அதாவது, வாழை மரங்களை பயிரிட்டுள்ள விவசாயிக்கு வாழைப்பழம் **பரமப் பிரயோசனம்.** அந்த வாழை

மரத்தின் தண்டு, இலை போன்றவைகள் **அவாந்தரப் பிரயோசனம்** எனலாம்.



அதுப்போல, இங்கு நமது இலக்ஷியம் நம்முடைய உண்மை சொரூபத்தை அறிந்து அதனுடன் நேரடி அனுபவமாவது.

இதுவே, '**பரமப் பிரயோசனம்**' ஆகும்.

ஆனால், அதற்கான சாதனமாக இந்த "**ஸ்தூல உடல்**" பயன்படுவது என்பது, '**அவாந்தரப் பிரயோசனம்**' என்றும் ஒரு தெளிவு இருக்க வேண்டும்.

இல்லாவிட்டால் என்னவாகும் எனில், வாழைப் பழத்தின் அருமை அறியாத ஒருவன் வாழை மரத்தைப் பயிரிட்டு, அதில் உள்ள பழங்களை உண்ணாமல், தண்டு, இலைகளை உண்பதற்கு ஒப்பாகும்.

அதாவது, பரமா(ஆ)த்மா என்ற வஸ்து ஒன்று மட்டுமே நித்தியம், மற்றவைகளெல்லாம் அநித்தியம் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

அப்படிப்பார்க்கின்ற பொழுது, பரமா(ஆ)த்மாவை **(நம்மை - நம் உண்மை இருப்பை)** அறிவது என்பது பரமப் பிரயோசனம்.

அதைவிடுத்து, மற்ற வழிமுறைகளெல்லாம், ஏற்கனவே கண்டதுப் போல, அவாந்தரப் பிரயோசனம் ஆகும்.

அதாவது, வாழைப்பழம் வேண்டுமென்றால், தண்டு, இலைப்பகுதிகளைக் கொண்ட வாழைமரம் ஒன்று அவசியம் இருக்க வேண்டும்.

இதில், தண்டையும், இலைகளையும் வேண்டாம் என்றும், வாழைப்பழம் மட்டும் வேண்டும் என்றும் நினைத்து தண்டுப்பகுதிகளையும், இலைகளையும் வெட்டி வீழ்த்தி விட்டால், அந்த வாழை மரத்தின் பயனாக கிடைக்கும் வாழைப்பழம் கிடைக்காது அல்லவா?

அதுவே, வாழைப்பழம் முழுப்பலனாக கிடைத்து விட்டவுடன், அந்த வாழைமரத்தை வெட்டி வீழ்த்திவிடலாம். பழத்தைப் பலனாகப் பெற தண்டுப் பகுதி, இலைகள் ஆரம்பத்தில் அவசியம் இருக்க வேண்டும்.

அந்தப்பலன் கிடைக்கும் காலம்வரை அவைகளை அவசியம் மதிக்கவும், பராமரிக்கவும் வேண்டும்.

அவ்வாறே, இந்த வெட்டவெளி உடல் அனுபவமாகும் வரை, இந்த ஸ்தூல உடல் பராமரிக்கப்படவேண்டும். ஆனால் அதன் மீதுள்ள அபிமானத்தை விட்டு, அது நம்முடைய சாதனைக்கு ஒரு சாதனம் என்று மட்டுமே பார்க்க வேண்டும்.

ஒரு ஊருக்கு பிரயாணம் செய்ய சாதனமாக ஒரு பேருந்தைப் பயன் படுத்துகின்றோம் என்றால், அந்த ஊர் சென்று சேரும் வரைதான் அதன் தேவை நமக்கு இருக்கின்றது. அந்த ஊரை அடைந்தவுடன், அந்த பேருந்தை விட்டு கீழே இறங்கி விட வேண்டும். அவ்வாறு செய்யாமல், அப்பொழுதும் அந்த பேருந்திலேயே உட்கார்ந்திருந்தால் பயணம் பயனற்றதாகிவிடும்.

அவ்வாறுதான் இந்த ஸ்தூல உடலும், வெட்டவெளி உடல் அனுபவமாகும் வரை பயன்பட வேண்டும், அதன் பிறகு இதன் மீதுள்ள அபிமானம் விடப்பட வேண்டும்.

மனிதன் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் சிந்தித்த சிந்தனையின் காரணமாக, பல்வேறு தேடுதல்களுக்கு உட்பட்டு, தன்னை அறிந்து இந்த தரணியை வெல்ல முடியும் என்ற வெற்றியை உலகுக்கு அறிவித்தவர்கள் சித்தர்கள்.

இவர்கள் சித்தம் தெளிந்தவர்கள்.

இவர்கள் இந்த பிரபஞ்ச இரகசியத்தினை அறிந்து கொள்ள தம்மிடம் உள்ள “**மனம்**” என்ற கருவியைக் கையாண்டு வென்றவர்கள்.

இன்றைய பல்வேறு விஞ்ஞான கண்டுபிடிப்புகளுக்கு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இந்த பிரபஞ்ச உண்மைகளை அவர்கள் கூறியுள்ளார்கள் என்றால், **அது எப்படி சாத்தியம் என நாம் சிந்திக்க வேண்டாமா?**

அவர்களால் எப்படி பூமியில் இருந்து கொண்டே மற்ற கிரகங்களை கணிக்க முடியும், எவ்வாறு அந்த கிரகங்களின் தன்மைகளை கூறமுடியும், கணக்கிடமுடியும், பல பால்வெளி மண்டலங்கள், அதனை சுற்றிலும் உள்ள மற்ற கோள்கள், ஆயிரக்கணக்கான சூரியன்கள், கோடிக்கணக்கான விண் மீன்கள், என அறிய மனோவியல், இயற்பியல், உயிரியல், வேதியியல், கணிதம் என பல்வேறு துறைகளில் பரந்த அறிவு கொண்டு இருந்தனர்.

அதற்குக் காரணம், இந்த '**மனம்**' என்ற கருவியை கையாளத் தெரிந்ததினால்தான் இதனையெல்லாம் கண்டு பிடித்தனர்.

ஆனால் நாம் மனோவியலை விட்டு விட்டு, அறிந்த அறிவியல் உண்மைகளையும், வேதாந்த உண்மைகளையும் மனப்பாடம் செய்து அப்படியே ஒப்பித்து வருகின்றோம்.

நம்மிடம் சுய அறிவிற்கு வேலையே இல்லாமல் நம் கல்வித் திட்டம் செய்து விட்டது.

*'அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்'* என்பது நம்முடைய இன்றைய வாழ்வில் நாம் காண்கின்றோம்.

எதனையும் அனுபவப்படாமல், மற்றவர்கள் கூறியுள்ள கருத்துக்களை, அப்படியே சரியென்று ஆமோதித்து வருவது, இன்றைய நாகரீகம் என்றாகிவிட்டது.

நம்மிடம் சுய ஆய்வுகள் ஏதுமின்றி போனதற்கு காரணம், நமது **'அறியாமையே'** ஆகும்.

நம்மை நாம் சுய அறிவிற்கு உட்படுத்த என்ன செய்ய வேண்டும்?

அதற்கு, மனம் நம் வசப்படவேண்டும்.

அதாவது, நம்முடைய உண்மை சொரூபத்தில் (அறிவில்) இருந்து, பிரதி பிம்பித்து வெளிப்பட்ட பிம்பமாகிய (மனம்), தனியாக அதன் போக்கில் செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது.

அவ்வாறு, அதன் போக்கில் செயல்களைச் செய்துக் கொண்டிருக்கின்ற மனதை, நம் வசம் (அறிவு) கொண்டு வந்தால் மட்டுமே, நாம் இந்த பிரபஞ்ச உண்மைகளை, வெட்டவெளி இரசியங்களை, அதாவது நம்மை நாம் (நம் அறிவை) நம்முள்ளே அனுபவமாக உணர முடியும்.

இதனை அறிய நமக்கு கொடுக்கப்பட்ட வாழ் நாட்கள் போதுமா என்றால் போதாது? என்ன செய்யலாம்?

அதாவது, இந்த ஸ்தூல உடலுக்கு மரணம் வரும் முன் நாம் எதற்காக இங்கு வந்தோம், என்ற உண்மையினை அறிந்து கொண்டு, அதனை நாம் நடைமுறையில் விரைவாக முடிக்க வேண்டும்.

## 4. மெய்ஞ்ஞானமும், விஞ்ஞானமும்

மனிதன் சிந்திக்கத் தொடங்கிய காலத்திலேயே பொருள் முதன்மையானதா? அல்லது அது பற்றிய கருத்து முதன்மை யானதா?

எதிலிருந்து எது தோன்றியது? இந்தக் கேள்விகளுக்கு விடை காண முற்பட்ட போது, உண்டானவைகள்தான் இந்த “**தத்துவங்கள்**” எனலாம்.

இந்தத் தத்துவங்கள் எல்லாமே அவரவர்கள் அவர்களது சித்தாந்தங்களை பல்வேறு விதமாக எடுத்துக்கூற வெளிப்பட்டவைகள்.

அந்த வகையிலே, சித்தர் தத்துவங்கள் வேதாந்த தத்துவங்கள், வாழ்க்கைத் தத்துவங்கள், கடவுள் தத்துவங்கள், கடவுள்மறுப்பு தத்துவங்கள் என பலவாறாகக் காணப் படுகின்றன.

பொருள் (Matter) முதன்மையானது, அதன் பிரதி பலிப்பே கருத்து (Concept) என்று சொன்னார்கள், பொருள் முதல் தத்துவவாதிகள்.

கருத்துத்தான் (Concept) முதன்மையானது, அதன் பிரதி பலிப்பே பொருள் (Matter) என்று சொன்னவர்கள், கருத்து முதல் தத்துவவாதிகள்.

இன்றைய காலத்தில் பயன்பாட்டில் உள்ள கணிணி, ரோபோக்கள் போன்றவையின் அமைப்பையும், செயலையும் ஒப்பிட்டுப் பார்த்தால் புரியும், நாம் ஏற்கனவே அதன் நினைவுச் சேமிப்புக் களத்தில் கொடுத்தவைகளை மட்டுமே, நாம் இடும் கட்டளைக்கு ஏற்ப, அவைகள் செயல்படுகின்றது.

இதுப்போன்றே, நம் மூளையில் (Hardware) நாம் சிறு குழந்தையில் இருந்து, இன்றுவரை உள்ளீடு செய்த, பல்வேறு விபரங்களில் (Softwares) இருந்துதான் அனைத்து முடிவுகளை எடுக்கின்றோம்.

இதற்குள் கட்டுப்பட்டு இயங்குகின்ற மனம் என்னும் இயக்கம், பல்வேறு சிந்தனையாக (Data’s) மாறும் தன்மை உடையது.

பொருளில் (அறிவில்) இருந்தே அனைத்தும் தோன்றின புல், பூண்டு, புழு, மரம், பறவை, இரும்பு, கல், உலோகங்கள், மற்றும் வாயுக்கள் என்று அனைத்தும் பொருள் மாற்றத்தால் உண்டாகின்றன.

ஒவ்வொரு வினாடியும் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன.

ஒரு விதை மரமாக, செடியாக மாறுகிறது. முதலில் தோன்றிய இலை உதிர்ந்து வேறு இலை உண்டாகிறது. இது நம் கண்ணால் பார்க்கும் செயல். இது இல்லாமல் இன்று இருக்கும் ஈயம் ஒருகாலத்தில், ரேடியம் என்ற உலோகமாக இருந்தது. இன்று வேதியல் மாற்றத்தால் மாறிவிட்டது.

இது போல் நம் உடலினுள்ளே உள்ள, நாம் பார்க்க முடியாத செல்கள், இரத்த அணுக்கள் என்று மாறிக்கொண்டே இருக்கிறது.

**இவை யாரோ ஒருவரால், வெளியில் இருந்து படைக்கப்பட்டவைகள் அல்ல.**

அண்டம் என்பது காலம் (Time), பொருள் (Matter), ஆற்றல் (Energy) இவற்றால் ஆனது.

அந்த வகையிலே, பொருளுக்கு, காலமும், இடமும் (Time and place) உண்டு. அவற்றை ஒன்றில் இருந்து ஒன்று பிரிக்க முடியாது.

பொருள் (Matter) என்பதை வெளியின் (Space) ஒரு ரூப வடிவம் என்றும் கூடக் கூறலாம்.

பொருள் (Matter) எதிர் மின்மம் (Electrons) நொதுமம் (Neutrons) நேர் மின்மம் (Protons) பொடிமம் (Quarts) போன்ற பல நுண்ணிய துகள்களால் ஆனது.

பொருள் (Matter) தொடக்கமும், முடிவும் இல்லாதது. பொருளை படைக்கவும் முடியாது, அழிக்கவும் முடியாது.

பொருளை (Matter) ஆற்றலாக (Energy) மட்டுமே மாற்ற முடியும்.

இதுதான் அணுக்கள் மட்டத்தில் குவாண்ட உலக மட்டத்துக்குள் செல்லுகையில், பொருளுக்கும், சக்திக்கும்

பொருந்தும் நியூட்டனின் ஆற்றல் மாறாக் கோட்பாடு, ஒரு வகையில் வெளிக்கும் கூடப் பொருந்தும் என்பதாகத்தான் தோன்றுகின்றது.

வெளியை உரு மாற்றம் செய்யலாமே தவிர, வெளியை புதிதாக ஆக்கவோ, உருவாக்கவோ, உடைக்கவோ, அழிக்க வோ முடியாது என்பது தானே இதன் பொருள்.

அதாவது, பொருளை ஆற்றலாக மாற்ற முடியும் என்று விஞ்ஞானமும், மெய்ஞ்ஞானமும் ஒன்றையேதான் கூறுகின்றது.

ஆனால், இங்கு அறிந்துக் கொள்ள வேண்டிய வித்தியாசம் என்னவெனில், விஞ்ஞானிகள் வெளியே உள்ள ஸ்தூலப் பொருள்களை ஆற்றலாக மாற்ற முடியும் என்கின்றார்கள்.

அதுவே, மெய்ஞ்ஞானிகளோ, அதையே சற்று மாற்றி, உள்ளே உள்ள பொருளை அவ்வாறே ஆற்றலாக மாற்ற முடியும் என்கின்றார்கள்.

அந்த வகையிலே, இங்கு நாம் உள்ளே எந்தப் பொருளை, என்ன ஆற்றலாக மாற்றப் போகின்றோம் என்பதை, அறிவியல் ரீதியாகவும், ஆன்மீக ரீதியாகவும் இங்கு ஆராய்கின்றோம்.

ஏனெனில், பொருளில் இருந்தே கருத்துக்கள் தோன்று கின்றன.

ஒரு பொருளை நாம் பார்த்து, அதன் குணாம்சங்களை அறிந்தபின், அதைப் பற்றிய அறிவை முறைப்படுத்தி அறிந்து கொள்வது, மனிதனிடம் காணப்படும் ஆறாவது அறிவான பகுத்தறிவின் வாயிலாகவே.

எனவே பொருள்களில் இருந்தே கருத்துக்கள் தோன்று கின்றன. கருத்தில் இருந்து பொருள்கள் தோன்றுவது இல்லை.

இந்த உண்மையைத் தெளிவாக தெரிந்து கொண்டால் மூட நம்பிக்கைகளில் இருந்து மனம் விடுபடும்.

இவ்வாறு அனைத்து விபரங்களையும் ஆராய்ந்து அறிந்து கொண்டவர்கள் '**சித்தம்**' (**மனம்**) என்ற ஒன்றை மட்டும் அறியாமல் இருப்பார்களா?

அவர்களே சித்தர்கள்.

இவர்கள் எந்த ஒரு குறுகிய வட்டத்திற்குள்ளும் சிக்க மாட்டார்கள், இவர்கள் மனித குலத்திற்கு கிடைத்த வரம்.

ஆக, நாம் இங்கு மனித உடலில் வந்த நோக்கத்தினை இன்றுவரை அறியாதவர்கள், இனிமேலாவது அறிய வேண்டும்.

அய்யய்யோ! எனக்கு 85 வயது ஆகிவிட்டது, இன்னும் சில காலங்கள் வாழ்ந்தேன் என்றால், நான் எதற்கு வந்தேன் என்பதை அறிந்து கொள்ள, உடனடியாக மெய்ஞ்ஞானத்தைக் கற்றுக் கொண்டு, தன்னை அந்தப் பொருளாக அறிந்துக் கொண்டால் மட்டும் போதுமா?

அப்படி நினைத்தீர்களேயானால், அந்த கருத்து (Concept) உங்கள் மனதை நன்கு ஏமாற்றி விட்டது என்பதனை உணருங்கள்.

உண்மையிலேயே நாம் அடைந்த ஞானம் எதைப் பற்றியது? அடைந்த அந்த ஞானத்தினாலே, மரணத்தை வென்று, பிறவாப்பெரு நிலையை அடைந்திட முடியுமா? அண்டத்தில் (வெளியில்) உள்ளதை, இந்தப் பிண்டத்தில் (நம் உள்ளே) அடைந்திட முடியுமா? முக்தி, மோக்ஷம் என்பது என்ன? இதற்கான தடைகள் என்ன?

இதை அறியத்தான் விஞ்ஞானமும், மெய்ஞ்ஞானமும் ஒருங்கிணைந்து இங்கு போதிக்கப்படுகின்றது என்பதிலிருந்து, இரண்டும் ஒன்றைத்தான் தேடுகின்றது என்பதை உங்களுக்கு சுட்டிக் காட்டப்படுகின்றது.

அந்த ஒன்றிலே மட்டும்தான் நிலைப்பெற, இந்த இரண்டும் முயற்சிக்கின்றது. அந்த வகையிலே விஞ்ஞானமோ தனக்கு வெளியிலே தேடுகின்றது, மெய்ஞ்ஞானமோ தனக்கு உள்ளே தேடுகின்றது.

ஆனால், இவ்வாறு இவர்கள் இருவரின் தேடுதலிலே மெய்ஞ்ஞானிகள் உள்ளே விடைக் கண்டு கொண்டனர். விஞ்ஞானிகளோ இன்னும் வெளியே விடைத் தெரியாமல் ஆராய்ந்துக் கொண்டிருக்கின்றனர்.

## 5. சாதனையும், சாத்தியமும்

இங்கு கூற வருகின்ற கருத்து, பெரும்பாலனவர்களுக்கு இன்னும் புரியாமல் இருப்பதற்குக் காரணம், அவர்களது மனம் இன்னும் தூய அன்பினால் மலரவில்லை.

சிற்சில பேதங்கள் இன்னும் அவர்கள் மனதிலே உள்ளன. இதிலே, வேதம் வகுத்துக் கொடுத்த, வாழ்வியல் நெறிமுறைகளை அதாவது, அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்பது முதற்கொண்டு, சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம் போன்ற சாதன சதுஷ்டயம் என இதுப் போன்ற முக்கியமான விசயங்களை, நாம் நம் வாழ்க்கையில் நடைமுறைக்கு கொண்டு வரும் பொழுது மட்டும்தான் இந்தப் பாடங்கள் இன்னும் எளிதாகப் புரியும்.

அதாவது, வேதாந்தப் பாடங்களிலே கூறப்பட்டுள்ள சம, தம, உபரதி, திதிக்ஷா, சமாதானம் போன்ற சாதன சதுஷ்டய சம்பத்துக்களை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

அல்லது அஷ்டாங்க யோகத்தில் கூறப்பட்ட இயமம், நியமம், ஆசனம், ப்ரத்யாகாரம் போன்றவைகளை ஒழுங்காகக் கடைப்பிடித்து தங்கள் தகுதிகளை உயர்த்திக் கொள்ள வேண்டும்.

இந்த இரண்டில் எதைக் கடைப் பிடித்து சித்த சுத்தி செய்துக் கொண்டாலும் சம்மதமே. அப்பொழுதுதான் சாதனை

சாதகனுக்கு எளிதில் சாத்தியமாகும். அதாவது, சாதனை இன்றி சாதிப்பார் உலகில் இல்லை என்பதுவும் புரியும்,

அதைவிடுத்து, சாதனைகளை சரியாகச் செய்யாமல், சாஸ்திரங்கள் கூற வருகின்ற உண்மைகளையும் ஏற்காமல், ஏதோ ஒரு பொழுது போக்கிற்காக இதுப்போன்ற விஷயங்களை அறிவது என்பது, இதன் ஆழமான உண்மைகளை அறிய முடியாமலேயே காலங்கள் வீணாகக் கழியும்.

வேதாந்த சாஸ்திரங்கள் கூற வருகின்ற மிகவும் ஆழமான விஷயம் என்ன?

**ப்ரஹ்மம் சத்தியம், ஜகத் மித்யா!** என்றும், **நீ அதுவாகவே இருக்கின்றாய்!** என்றும் பலவாறாக கூறுகின்றன.

இதிலிருந்து என்ன அறிந்துக் கொண்டோம்? நான் ப்ரஹ்மமாக இருக்கின்றேன் என்றா?

சரி அப்படியே நான் ப்ரஹ்மம் என்று அறிந்துக் கொண்டோம் என்றால், ப்ரஹ்மம ஆகிவிட்டோம் என்று அர்த்தம் ஆகிவிடுமா? அது என்ன அவ்வளவு எளிதில் அகப்படும் பொருளா?

ப்ரஹ்மம் என்பது எப்படிப்பட்டது, அதன் இலக்ஷணங்கள் என்ன? என்பதையெல்லாம் கற்றறிந்து, புத்தியில் வைத்துக் கொண்டுள்ளோமே தவிர, அதனிடம் இருக்கும் ஒரு தகுதியாவது நம்மிடம் அனுபவமாக தற்பொழுது இருக்கின்றதா?

எதன் அடிப்படையில், நம்மை நாம் **'ப்ரஹ்மம்'** என்கின்றோம்?

அல்லது, ப்ரஹ்மம் என்று பாவனை செய்துக் கொண்டிருந்தால், நாளடைவில் ப்ரஹ்மம் ஆகிவிடலாம் என்றா?

அதாவது **'நீ எதுவாக நினைக்கின்றாயோ, அதுவாகவே ஆகிவிடுவாய்'** என்பதற்கு ஏற்ப, அப்படி ஒரு சமயம் நாம் அதுவாகவே இருக்கின்றேன் என்று பாவனை செய்துவந்தால் நாளடைவில் அதுவாகவே ஆகிவிட முடியுமா?

எத்தனை நாட்கள், எத்தனை வருடங்கள், அல்லது எத்தனைப் பிறவிகள் இதற்கு ஆகும்?

யோசித்துப் பாருங்கள்!

**ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதியை**
**நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்து போய்**
**வாடி வாடி வாடி வாடி மாண்டு போன மாந்தர்கள்**
**கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே.**

- சிவவாக்கியர்.

இதுவரை நாம் கற்ற சாஸ்திரங்கள் நம்மை நமக்கு காட்டிக் கொடுத்தாலும், அந்த சாஸ்திரங்கள் வாயிலாக நான் ப்ரஹ்மம் அல்லது வெட்டவெளி என்று அறிந்துக் கொண்டாலும், அது நமக்கு நேரடி அனுபவம் ஆகாமல், இப்படியே மேலும், மேலும் வேதாந்த விசயங்களை நம்

புத்திக்கு ஏற்றிக் கொண்டே இருப்பதினால் என்ன பயன்? என்று ஒரு நாளாவது யோசித்துப் பார்த்திருக்கின்றோமா?

அதுதான் தெரிந்த விஷயம் ஆகிவிட்டதே.

ஆம்! ‘**நான் ப்ரஹ்மம்**’ என்று தெரிந்து கொண்டாகி விட்டதே. பிறகு மீண்டும், மீண்டும் அந்த சாஸ்திரத்தை பல்வேறு ஆசிரியர்களின் வாயிலாகவும், பல்வேறு MP3 ஆடியோக்களின் வாயிலாகவும் கேட்டுக் கொண்டே இருந்தால் ப்ரஹ்மம் அனுபவமாகி விடுமா?

அதாவது, வேத சாஸ்திரம் ப்ரஹ்மம் மட்டுமே சத்தியம் என்கின்ற பொழுது, அதற்கு வேறாக எதுவுமே இருக்க முடியாத பொழுது, பிறகு ஏன் **பக்தி செய், கர்மம் செய், யோகம் செய், ஞானம் அடை** என பலவாறு உபதேசிக்கின்றது என்பதை சற்று, நுண்ணிய அறிவால் ஆராய்ந்துப் பார்க்க வேண்டும்.

அதாவது, ஆரம்ப சாதகன் இறைவன் யாரென்று அறிய முடியாமல், உருவத்தில் எதாவது ஒன்றை வடித்துக் கொண்டு, அந்த உருவத்தை பக்தி செய்கின்ற பொழுது, அவனுக்கு அந்த உருவத்தின்மீது உண்டான பக்தி (அன்பு), நாளடைவில், அதற்கு பூசைகள், அனுஷ்டானங்கள், உபாசனைகள் என்ற கர்மங்கள் தேவைப்படுகின்றது.

அவ்வாறு, அவன் செய்த கர்மங்களினால், மனம் இன்னும் சற்று தெளிவடைந்து, மேலும் தூய்மையாக்கும் பொருட்டு யோகம் பயின்று, அதில் கூறப்பட்ட இயம,

நியமங்களை அனுசரித்து, அதனால் சித்தம் சுத்தமாகி அதன் பிறகு அவனுக்கு இந்த ஞான மார்க்கத்தில் நுழையும் தகுதி உண்டாகின்றது.

அவ்வாறு ஞான மார்க்கத்தில் உள்ளே வந்து, தத்துவங்களை விசாரித்து, மனதை விசாரித்து, நான் யார்? என்று கேள்விகள் கேட்டு, தன் சொரூபத்தை அறிந்து, நான் இந்த உடல் அல்ல!, மனம் அல்ல! என்ற புரிதல் வந்து தன்னை தன் சொரூபத்தை அறிந்துக் கொண்டவன் அடுத்து செய்ய வேண்டியது என்ன?

அதாவது தன்னை தன் சொரூபத்தை அறிந்தவன் அதனை அனுபவமாக்காமல், அப்படியே தன்னை ப்ரஹ்மம் என்று பாவித்துக் கொண்டு வருவானேயாகில், அது இந்த உடலை எப்படி '**நான்**', '**நான்**' என்று கூறிக் கொண்டு இருந்தானோ, அவ்வாறே சாஸ்திரத்தின் வாயிலாக அறிந்த தன் சொரூபத்தை '**நான்**', '**நான்**' என்று கூறிக்கொண்டிருக்கலாம்.

மற்றபடி அது அனுபவம் ஆகாது.

அப்படியானால் என்ன செய்ய வேண்டும்!



## 6. பக்தியும், ஞானமும்!

இங்குதான் நாம் **ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி** உபதேசித்த சின் முத்திரை ரகஷியத்தை அறிய வேண்டும். அதாவது, பூஜ்ஜியம், முழுமை பற்றிய உண்மையை அறிய வேண்டும்.

அது எப்படி?

பூஜ்ஜியம் என்பது என்ன?

ஒரு வட்டம்.

அதாவது, இது எங்கு தொடங்கி எங்கு முடிகின்றது என்பதை அறிய முடியாமல், ஒரு சுற்று சுற்றியவாறு உள்ளது.

இது நமக்கு உணர்த்தும் உண்மை என்ன?

அதாவது, எப்படி ஆரம்பத்தில் இறைவனை பக்தி செய்ய ஆரம்பித்து அந்த பக்தியின் நடைமுறைகளை **சரியை, கிரியை, யோகம் ஞானம்** என்றெல்லாம் எடுத்துக் கூறி இறுதியில் ஞானத்திற்கே அறிவுறுத்துகின்றது.

இவ்வாறு பல படி நிலைகளைக் கடந்து, இறுதியில் ஞானத்திற்கு வந்து விட்டு, அறிந்த ஞானத்தைக் கொண்டு அங்கேயே நின்று விடாமல், மீண்டும் பழையபடி பக்திக்கே திரும்பி போகவும் வேண்டும் என்பதை, ஆள்காட்டி விரலும்,

கட்டை விரலும் சுருட்டிக் காட்டும் அந்த வட்டம் இதைத்தான் போதிக்கின்றது.

அதாவது, ஆரம்பமும், முடிவும் இல்லாத அந்த வெட்டவெளியை வட்டத்தில் சுட்டிக் காட்டி மீண்டும் என்னை பக்தியினால் மட்டுமே அடைய முடியும் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

ஆனால், இந்த ஞானத்தினால் அடைந்த விசயம் ஒன்றேயான ப்ரஹ்மம். அதுவும் தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்ற அறிவு கிடைத்துள்ள நிலையில், யார் யாரை பக்தி செய்வது என்ற சந்தேகம் வரலாம்.

இங்குதான் நாம் பக்தியின் படி நிலைகளை சற்று கவனித்துப் பார்க்கின்ற பொழுது, இப்பொழுது நாம் படித்துக் கொண்டிருக்கும் ஐந்தாவது பாடத்திட்டத்தின் படி நமக்கு உண்டாக வேண்டிய பக்தி, இரண்டற்ற ஒன்றேயான "**அநன்ய பக்தி**" என்பதாகும்.

அந்த பக்தியை எப்படி செய்ய வேண்டும்?

யார் யார் மீது பக்தி செய்வது?

இருப்பதோ ஒன்றே ஒன்று என்ற ஞானம்.

ஆனால் கூறப்படுவதோ பக்தி.

இந்த நிலையில் எப்படி பக்தி செய்வது?

எதை பக்தி செய்வது?

என்னை நானே பக்தி செய்வதா?

இங்குதான் தனக்கு வேறாக ஒன்றுமே இல்லை என்ற ஞானத்தின் வாயிலாக உண்டாகிய தெளிவு காரணமாக, "**இருப்பதெல்லாம் இறைவ(நா)னே**!" என்ற கண்ணோட்டத்தில் அனைத்திலும் தன்னைப் பார்த்து, அவைகளை தனக்கு வேறாக இல்லை எனக்கருதி அன்பு செய்வதுதான் '**அநன்ய பக்தி**' எனப்படுகின்றது.

இந்த பக்தி மலர்ந்துவிட்டால், என்னில் நீ!, உன்னில் நான்! என்ற அடிப்படைக் குணம் மேலோங்கி, குணங்களற்ற "**குணாதீதன்**" நிலைக்கு அடுத்து உயர முடியும்?

அது எப்படி?

அதாவது, தன்னில் தானாய் அனைத்துமே இருக்கின்ற பொழுது, நான் இருப்பதினால்தான் எனக்கு இந்த உலகம் விரிகின்றது. என்னால்தான் இந்த சூரியன் பிரகாசிக்கின்றது என்பதுப் போன்ற அனைத்தும் அனுபவமாக மாறும்.

எப்படி?

அதாவது, இருப்பது ஒன்று (நான்) மட்டுமே!

ஆனால், எனக்கு எதிராக எப்படி காட்சி விரிகின்றது?

அதாவது, "**நான் இருக்கின்றேன்**" என்று தன்னை அறியும் அந்த அறிவு இருக்கின்றது அல்லவா? அதுதான் '**உள்ளுணர்வு**' எனப்படுகின்றது என்று ஏற்கனவே கூறப்பட்டது.

அந்த உள்ளுணர்வுதான் இந்த உடலில் ஊறும் எறும்பு முதல், எதிரே விரியும் இந்த உலகம் வரை அனைத்தையும் உணர்கின்றது?

அதாவது, உடலின் மீது ஊறும் எறும்பு உடலில் உள்ள தோல் மீது ஊறுவதை, எவ்வாறு அந்த உள்ளுணர்வு என்ற அறிவு அறிகின்றதோ, அவ்வாறே, மற்ற புலன்களின் உதவியினால், அதே அறிவுதான் அனைத்தையும் அறிகின்றது.

அந்த அறிவுக்கு வேறாக எதுவுமே இல்லை எனும் பொழுது, எதிரே தெரியும் எல்லாமே அந்த அறிவின் உணர்தலே என்பதை புரிந்துக் கொள்ளுங்கள்.

அதாவது, நான் இருப்பதினால்தான் இந்த சூரியன் பிரகாசிக்கின்றது. நான் இருப்பதினால்தான் நட்சத்திரங்கள் மின்னுகின்றன. நான் இருப்பதினால்தான் இந்தப் பிரபஞ்சம் இருக்கின்றது என்பதை அறிந்துக் கொள்ளுங்கள்.

அதன் பிறகு, இந்த மொத்த பிரபஞ்சமும், இந்த பிரபஞ்சத்திற்கு வேறாகவும் ஒன்றுமே இல்லை என்ற அந்த அனுபவம் இந்த வெட்டவெளியின் பல்வேறு இரகசியங்களை தன்னில் தானாய் அறியவும் முடியும். அதுதான் ப்ரஹ்ம அனுபவம். அதுதான் வெட்டவெளி அனுபவம். இப்படித்தான் சித்தர்கள் தன்னில் தானாய் அனைத்தையும் உணர்ந்தார்கள்.

அதை விடுத்து, நான் ப்ரஹ்மம் என்று வாயினால் கூறுவதினாலோ, பாவனை செய்துக் கொண்டிருப்பதினாலோ, ப்ரஹ்மம் அல்லது வெட்டவெளி அனுபவம் நேரடியாக உண்டாகாது என்பதை அறியவும்.

இவ்வாறு அநன்ய பக்தியின் வாயிலாகவே பல்வேறு மகான்கள் பலனடைந்துள்ளனரே தவிர, மற்றவர்கள் நினைத்துக் கொண்டிருப்பதுப் போன்று, கர்மங்கள், வழிபாடு போன்ற காமிய பக்தியினாலோ, மற்ற தியானம், மூச்சு பயிற்சி போன்று செய்வதினாலோ, நம் உண்மை சொரூபத்தை நாம் அறிந்து, அனுபவப்பட முடியுமா என்ன?

அதனால், அறிய வேண்டிய அரிய உண்மை என்னவெனில், சாதாரணமான பூசைகள், கோவில்கள், யாக யஞ்ஞங்கள், அபிஷேக ஆராதனைகள் போன்ற பக்திகள் எல்லாமே சித்த சுத்திக்கு மட்டுமே பயன் தருமே தவிர, அந்த இறைவனை அனுபவமாக அறிய முடியாது என்பதில் தெளிவாக இருங்கள்.

அதாவது, ஆன்ம அனுபவம் என்பது, வேறொன்று மில்லை, அனைத்து உயிர்களிலும் தன்னை கண்டு, அவைகள்

தனக்கு வேறாக இல்லை, நான் இருப்பதினால்தான் அவைகள் இருக்கின்றன என்பதை அறிந்து, அவைகளின் மீது வைக்கின்ற எதையும் எதிர்ப்பார்க்காத, சுயநலமற்ற தூய அன்பே, அதாவது மிக உயர்ந்த பக்தியே, "**அநன்ய பக்தி**" எனப்படுகின்றது.

அந்த இரண்டற்ற பக்தியால், ஒன்றாய் கலந்த அன்பினால் தன் சொரூபத்தை தானே அனுபவிக்கின்ற ஒரு ஆனந்த அனுபவம் அது.

இதுதான் '**வெட்டவெளி**' அனுபவம். தன் சொரூப அனுபவம். அதாவது பூஜ்ஜிய அனுபவம்.

அதைவிடுத்து, பெயருக்கு முன்னால் வெறும் பூஜ்ய ஸ்ரீ என்று வைத்துக் கொண்டு இருப்பது, நாம ரூபங்களற்ற ஒன்றை அனுபவமாக அறியாமல் இருப்பதை அறியலாம்.

## 7. பூஜ்ஜியமும், எண்களும்

மதிப்பே இல்லாதது பூஜ்ஜியம், அதாவது, மதிப்பிட முடியாதது, மதிப்பை அளக்கவே இயலாது என்பது பூஜ்ஜியம்.

அதுவே பிரஹ்மம். இதுவே நிர்குண பிரஹ்மம். இது சத்தியம்.

மதிப்பீடு உடையது எண்கள் பெயர்கள், பொருள்கள் எனலாம். அதாவது, எண்களின் மதிப்பைப் பொருத்து, அது பூஜ்ஜியத்துடன் இணையும் பொழுது, அதன் மதிப்பு மாறுபடுகின்றது. அவ்வாறே ஒரு பொருளை மற்ற ஒரு பொருளுடன் ஒப்பிடும் பொழுது, அது மதிப்பு உடையதாக மாறுகின்றது.

இதுவே சக்தி. இதுவே சகுண பிரஹ்மம். இது மித்யா.

உதாரணமாக, கணிதத்தில் **பூஜ்ஜியம், சூழி, சைபர்** என்ற சுட்டுப் பெயரிட்டு குறிக்கப்படும், அந்தக் குறியீட்டிற்கு உண்மையில் பொருள்தான் என்ன?

எண்களின் எல்லையில்லாத தன்மையைக் குறிப்பிடப் பயன்படும் முடிவிலி (Infinitive) என்ற எல்லையற்ற சொல்லின் பொருளுக்கும், பூஜ்ஜியம் என்று அறிந்துக் கொண்டுள்ள, அந்த பூரணம் என்ற சொல்லின் பொருள் விளக்கத்திற்கும் இடையே உள்ள ஒரு தொடர்புதான் அதற்கு மதிப்பையும், மதிப்பின்மையையும் அளிக்கின்றது.

அதாவது எண்களைப் பற்றிப் பேசும் போது, அதனால் உண்டாகும் மதிப்பீட்டின் காரணமாக, எழும் எல்லையற்ற என்ற சுட்டுச் சொல்லின் பொருளுக்கும், பூரணம் என்ற சொல் உணர்த்த வரும் பொருளுக்கும், இடையே உள்ள அந்த இனம் புரியாத நிர்குண - சகுண வித்தியாசம் காரணமாகத்தான் மதிப்பும், மதிப்பின்மையும் உண்டாகின்றது.

அதாவது, எண்கள் என்பது பொருட்களைப் போன்று பல்வேறு பரிமாணங்களைக் கொண்டது. அதுவே, பூஜ்ஜியம் என்பது தனித்த முழுமையானது.

பொதுவாக, நாம் அனைவரும் பூஜ்ஜியம் என்றால் ஒன்றுமில்லாத, சூனியத்தைக் குறிக்கப் பயன்படும் ஒரு சொல்லாகத் தான் நடைமுறை வாழ்க்கையில் பயன்படுத்தி வருகிறோம்.

கணிதத்திலும் கூட சற்றேறக்குறைய, இதே பொருளில் தான் பயன்படுத்தி வருகிறோம் என்ற போதிலும், கணிதவியலைப் பொறுத்த வரை இடத்தைப் பொறுத்து, அதுவும் கூட மாறுபடுகிறது.

அதாவது அது அமைந்திருக்கும் ஸ்தானத்தைப் பொறுத்து அவ்வப்போது அதன் மதிப்பும் கூட, வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு என்பதாக வரும் என்பது நமக்கும் புரிய வரும்.

ஆழ்ந்து யோசித்துப் பார்த்தோமேயானால், அது குறித்த மேலும் பல உண்மைகள் புரிய வரும்.

முதலில் அது ஒன்றையே, அதாவது பூஜ்ஜியத்தை மட்டும்தான் பூரணத்துடன் ஒப்பிட முடியும் என்பதை உறுதிப்படுத்துவதாய் உள்ள அதன் பண்பு நலன் கூர்ந்து கவனிக்கத்தக்கது.

பூரணம் என்பது தமிழில் முழுமையை குறிக்கும்.

பூரணத்திற்குத் இன்னொரு சிறப்பு விளக்கமும் உண்டு.

அது “**பூரணத்திலிருந்து பூரணத்தை எடுத்த பின்பு எஞ்சுவதும் பூரணமே**” என்ற உபநிஷதத்தின் ஒரு கருத்து ஆகும்.

மேலே கண்ட இந்தக் கருத்தோட்டத்தை, இந்த மொத்தப் பிரபஞ்சத்திலேயே ஒரே ஒரு விஷயத்திற்குத் தான் பொருத்திப் பார்க்க முடியும். அதுவே ஸ்பேஸ் (space) எனப்படும்.

இது “**வெட்ட வெளி**” தான் என்பதை விளக்கவும் வேண்டுமோ?

இந்த வெட்ட வெளியை நாம் நம் கையால் திட, திரவ, வாயுப் பொருட்களை எடுப்பது போல் வாரி அள்ளி எடுக்க முடியுமா என்ன?

வாயுப் பொருட்களை நேரடியாகக் கைகளால் கையாள முடியாது போனாலும், அதையும்கூட எதாவது ஒரு கொள்கலனில் (உதாரணமாக, பலூன், சிலிண்டர் போன்ற ஏதாவது ஒரு கொள்கலனில்) அடைப்பதன் மூலம், அதையும் எப்படியோ ஒரு வழியாகக் கைகளால் கையாள்கிறோம், ஆனால் வெளியை அப்படிக் கையாள முடியுமா?

ஆனால், பருப்பொருளைக் கையாள்கிறோம் என்றாலே, “**அந்தப் பொருள் அடைத்துக் கொண்டிருக்கும் வெளியையும் (ஆகாயத்தையும்) சேர்த்தேத்தான் கையள்கிறோம்**” என்பதாக நாம் அறிந்துக் கொள்ளலாம்.

ஆனால், இங்கு நாம் புரிந்துக் கொள்ள வேண்டியது, பருப்பொருளால் அடைத்துக் கொள்ளப்படாத “**சுத்தமான வெட்ட வெளியை**” நம்மால் கையாள முடியுமா?

அதாவது, ஒரு பொருள் இயங்குகிறது என்றாலே, அந்தப் பொருள் அடைத்துக் கொண்டிருக்கும் வெளியும் (ஆகாயமும்) கூடவே சேர்ந்து இயங்குகிறது என்றும் தான் பொருள்.

ஆக, வெளியும் (ஆகாயமும்) ஒரு வகையில் இயங்குகிறது என்று தான் அர்த்தம். பிரஹ்மபுரமாகிய சிதம்பரத்தில் (சிதாகாசத்தில்) கண்ணுதற் பெருமான் ஸ்ரீ நடராஜர் கோலத்தில் எழுந்தாடுவது என்பது, “**அப்பெருமான் அசைந்தாலன்றி அணுவும் அசையது, அப்பெருமான் ஆட உயிருள்ள, உயிரற்ற பொருட்களென்று அனைத்துமாடுகின்றன**” என்பதை விளக்குகின்ற ஒரு ஆன்ம தத்துவமாகும்.

இந்த தத்துவத்தை அறிந்துக் கொண்டவர்கள், உடனடியாக இறைவன் உருவத்தில் இல்லவே இல்லை, வெட்ட வெளியாகவே இருக்கின்றான் என்று உருவ வழிபாட்டை விட்டு விட்டனரா?

இல்லையே!

ஏன்? அவர்களுக்கு இந்த தத்துவம் புரியவில்லை. அதைப் புரிந்துக் கொள்ள வேண்டுமானால், இருமைகள் அற்ற மன நிலைக்கு வந்து, மெய்ஞ்ஞானமும், விஞ்ஞானமும் அந்த ஏக இறைவனின் வெளிப்பாடு என்ற தெளிவு அவர்கள் மனதில் பிறக்க வேண்டும்.

அதைவிடுத்து, ஏற்றி வைத்துக் கொண்டுள்ள ஏகப்பட்ட எண்ணங்களில் சிக்கிக் கொண்டு இருப்பவர்களுக்கு, மேலும், சிறுமதியுடனே சிந்திக்காமல் இருப்பவர்களுக்கு, பரந்த வெட்ட வெளி போன்ற ப்ரஹ்ம இரகசியங்களை அறிவதற்கான பெரு மதி (broad-mind) உண்டாகாமல், மனிதன் புனிதனாக உயரவே முடியாது.

ஆகவே, சற்று ஏற்றிவைத்துக் கொண்டுள்ள ஏராளமான புற விசய சுகங்களை எல்லாம் இறக்கி வைத்துவிட்டு, உள்ளே உள்ள உள்ளுணர்வு மையத்தில், உண்மை எப்படி இருக்கின்றது என்பதை உள்ளத்தால் உணரும் பொழுது, அந்த உண்மையை எளிதாக அறிந்துக் கொள்ள முடியும்.

அந்த வகையிலே, நேரடியாக ஆகாயத்தை நம் வெறும் கண்களால் நாம் காண முடியாது போனாலும், புறப் பருப்பொருள்களின் இயக்கத்தினூடே நாம் காண்பது எல்லாமே, உண்மையில் வெளியின் இயக்கத்தையும் கூடவே சேர்த்துத்தான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

அப்படி வெளியும் இயங்குகிறது என்றால், இயக்கம் பற்றிய நமது புரிதலிலேயே, ஒரு பெரும் அடிப்படை பார்வை மாற்றம் ஏற்படுவதை இங்கு நாம் அவசியம் உணர முடியும்.

வழக்கமான இயக்கம் பற்றிய, நமது பாரம்பரியக் கண்ணோட்டத்தில், இரண்டு அடிப்படை பின்னணிகள் தேவை.

ஒன்று நிலையானதாக, இயக்கமற்ற ஒரு பின்னணி. இரண்டாவது, அந்தப் பின்னணியின் மீது இயங்கக் கூடிய, இயங்க வேண்டிய ஒரு பொருள் அல்லது பல பொருள்கள்.

உண்மை என்னவெனில், எந்த ஓர் இயக்கமும் நடைப்பெற வேண்டுமென்றால், இயங்காத ஒன்று அதற்கு ஆதாரமாக வேண்டும்.

உதாரணமாக, ஒரு ரயில் வண்டி ஓடவேண்டுமானால் அதற்கு அசையாத தண்டவாளம் ஆதாரமாக வேண்டும். திரைப்படம் இயங்க வேண்டுமானால், அதற்கு அசையாத ஒரு திரை ஆதாரமாக வேண்டும்.

அவ்வாறே, இந்த உலகின் இயக்கங்கள் அனைத்திற்கும் காரணமான அசைவு ஈஸ்வரன் என்ற சக்தியினால் நிகழ வேண்டும் என்றால், அதற்கு அசைவற்ற **‘ஆன்மா’** ஆதாரமாக இருக்க வேண்டும்.

**ஆன்மா = வெட்டவெளி = ப்ரஹ்மம்.**

# 8. <u>ஆன்மாவும், அதன் அசைவும்</u>

**தேஜதி தன்னைஜதி தத்தூரே தத்வந்திகே |**
**ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத: ||**

**(ஈசாவாஸ்ய உபநிஷதம் - 5).**

**<u>இந்த மந்திரத்திற்கான விளக்கம்</u>**

**அது அசைகிறது, அது அசைவதில்லை. அது தூரத்தில் உள்ளது, மிக அருகில் உள்ளது. அது அனைத்தின் உள்ளே உள்ளது, அனைத்தின் வெளியிலும் உள்ளது.**

இந்த மந்திரத்தை மேலோட்டமாகப் படிக்கின்ற வர்களுக்கு ஒரே குழப்பமாக இருக்கும். என்னஇது! ஆன்மா அசைகின்றது என்றும் கூறுகின்றது, பிறகு பின்னலேயே அது அசைவதில்லை என்றும் கூறுகின்றது.

அவ்வாறே, அது தூரத்தில் உள்ளது என்று கூறிவிட்டு, பிறகு பின்னாலேயே, அது அருகில் உள்ளது என்று கூறுகின்றது. பின்பு, உள்ளேயும் உள்ளது, வெளியேயும் உள்ளது என்கின்றது.

படிக்கின்றவர்களுக்கு ஒரே குழப்பமாக உள்ளது என்று தோன்றும். இதன் விளக்கத்தை கவனியுங்கள்.

ஆன்மா எங்கும் நிறைந்ததாக இருப்பதால், இந்த முரண்பட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன.

பிரபஞ்சத்தின் இயக்கங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பது ஆன்மா. எனவே ஆன்மா அசைகிறது.

அது ஆன்மா என்ற நிலையில், அதாவது எங்கும், எதிலும் நீக்கமற நிறைந்த நிலையில் அதற்கு அசைவில்லை.

நம் ஒவ்வொருவரின் உள்ளேயும் ஆன்மா உள்ளது. எனவே அது மிக மிக அருகில் உள்ளது. ஆனால், நாம் அதை உணராத நிலையில் அது மிகவும் தூரத்தில் உள்ளது.

அது போலவே இறைவன் என்ற நிலையில் அது எங்கும் நிறைந்ததாக இருப்பதால் அனைத்தின் உள்ளேயும் உள்ளது, வெளியேயும் உள்ளது.

இவ்வாறு இதை சத்குவின் வாயிலாக சரியாகப் புரிந்துக் கொள்ள வேண்டும்.

அதாவது இயக்கம் என்றாலேயே, அதைப் பொருட்க ளோடு மட்டுமே சம்பந்தப்படுத்தி யோசித்துவந்த, நமது பாரம்பரியச் சிந்தனைக்கு, அதை இப்போது அரூபமான வெட்ட வெளிக்கும் சேர்த்து, நீட்டிப்புச் செய்து யோசித்துப் பார்ப்பதில் சற்றுப் புதிய கண்ணோட்டம் உண்டாகின்றது.

ஆனால், எல்லாமே இயங்கிக் கொண்டிருக்கின்றன எனும்போது, அந்த வெட்ட வெளியை மட்டும் எதன் அடிப்படையில், நிலையான பின்னணியாக, அதாவது அடிப்படைத் தளமாகக் கொள்வது?

மிக நவீன இயற்பியல் இன்று பொருள் (Matter) என்பதே வெளியின் திரிந்த ஒரு வடிவம் என்றுதான் கூறுகிறது. ஆக நாம் காணும் அத்தனைப் பருப்பொருள்களும் ஒரு வகையில் வெளியின் திரிந்த வெவ்வேறு வடிவங்களே.

பொருள் (Matter) என்பதை வெளியின் (Space) ஒரு ரூப வடிவம் என்றும் கூடக் கூறலாம்.

கண்ணுக்குத் தெரிகின்ற ரூபங்களில் உள்ள பொருள்களின் இயக்கவியல் வடிவங்களையே, நாம் இன்னமும் தெளிவாக, முழுக்கப் புரிந்து கொள்ள முடியாத நிலையில், புலன்களுக்குப் புலனாகாத அரூப (Invisible) இயக்கவியல் வடிவங்களை எல்லாம் எப்படிப் புரிந்து கொள்ளப் போகின்றோம்?

அடுத்ததாக பொருளுக்குள் வெளி உண்டு என்றாலே, அதாவது, பொருளுக்குள் அடைத்துக் கொண்டிருப்பது வெளி (space) என்றாலே, உடனே வெளியிலும் இரண்டு வகைப் பிரிவுகள் உண்டோ? என்பது போன்ற சந்தேகம் எழுகிறது.

அதாவது பொருட்களால் அடைத்துக் கொள்ளப்பட்ட உள் வெளி (ஜீவன்) ஒரு வகை. பொருள்களால் அடைத்துக் கொண்டு ஆக்ரமிக்கப்படாத வெட்ட வெளி (ப்ரஹ்மம்) மற்றொரு வகை.

அதாவது, வெளி உலகில் உள்ள இன்னும் குறிப்பாக, தெளிவான வார்த்தைகளில் குறிப்பிட வேண்டுமென்றால், இந்த மொத்தப் பிரபஞ்சத்தையே (ஈஸ்வரனையே) தனக்குள்

கொண்டுள்ள பிளவுப்படாத வெட்ட வெளியை (ப்ரஹ்மத்தை) குறிப்பிடலாம்.

வெட்ட வெளியில் (அண்டத்தில்) விளங்கும் பிரபஞ்சத்தை "**விராட் ஸ்வரூபம்**" என்றும், உடலின் உள் வெளியில் (பிண்டத்தில்) விளங்கும் பிரபஞ்சத்தை "**ஆன்ம ஸ்வரூபம்**" என்றும் அறிய வேண்டும்.

பொருள்களுக்குள் அடைத்துக் கொண்டிருக்கும் உள் வெளியை ஒரு வகையில், கட்டுண்ட அல்லது பிளவுபட்ட, சிதைந்த, சுருங்கிய என்று எப்படி வேண்டுமானாலும் கூறலாம்.

அதாவது இன்னும் தெளிவான வார்த்தைகளில் கூறினால் திரிபடைந்த, <u>பருப் பொருளினால் பாதிப்படைந்த வெளி</u> என்று கூடக் கூறலாம்.

அறிவியல் விஞ்ஞானி ஐன்ஸ்டீன் கூட '**வெளி**' பொருட் களால் வளைக்கப்படுகிறது என்றுதான் கூறுகின்றார்.

அதாவது, பொருட்களைச் சுற்றியுள்ள வெளியானது பொருட்களின் நிறையீர்ப்பு விசையின் காரணமாக வளைக்கப் பட்டுள்ளது என்றுதான் கூறியுள்ளாரே தவிர, பொருட்களின் தாக்கத்தால், வெளி உடைந்ததாகவோ அல்லது வெளியை உடைக்க முடியும் என்றோ அவரும் கூறவில்லை.

வெளி எப்படி பொருட்களை தன்னுள் சிறை பிடித்து உள்ளதோ, அப்படியே பொருட்களும் வெளியை தன்னுள் சிறைப்பிடித்தே உள்ளன.

இதைத்தான், **“நான் பிரபஞ்சத்தில் இருப்பதைப் போல, பிரபஞ்சம் என்னுள் இருக்கிறது”** என்று கூறப்படுகின்றது.

வெளியில் உள்ள கருந்துளைகள் ஒளியைக் கூடத் தப்ப விடுவதில்லை, தங்களது அசாதாரணமான நிறையீரப்பு விசையின் காரணமாக என்றால், கருந்துளைக்குள் உள்ள வெளியை எந்தப் பிரிவில் சேர்ப்பது, என்ற மற்றொரு புதிய கேள்வி எழுகின்றது.

பொருட்களின் வெவ்வேறு வகை மாதிரிகளும், வெளியின் வெவ்வெறு திரிந்த அல்லது நசுங்கிய வடிவம் தான் என்றாலும், உடனே நாம் ஒரு உடைந்த வெளியைப் பற்றிக் கற்பனை செய்ய வேண்டியதில்லை. அதாவது, வெளி பின்னமாகி விட்டது என்று அர்த்தம் அல்ல.

பொருட்களின் அத்தனை மாதிரிகளும், ஒரு வகையில் பிளவு படாத ஒரே வெளியின் (ப்ரஹ்மத்தின்), திரிந்த அல்லது நசுங்கிய பல்வேறு வடிவங்கள் (ஈஸ்வரன் - விராட்) என்பதை அறிய வேண்டும்.

சனாதன தர்மத்தின் வேதாந்த சாஸ்திரம் கூற வருகின்ற அத்வைதக் கருத்துக்கு, இதை விடவும் வலிமையானதொரு உதவி கிடைக்கப் போவதில்லை.



## 9. <u>பூரணமும், புரிதலும்!</u>

எனவே, மீண்டும், மைய விஷயமான பூரணத்துக்கே வருவோம்.

‘**பூரணம்**’ என்பது முழுமையானது.

அதுவும் எப்படிப்பட்ட முழுமை? அந்த முழுமை யிலிருந்து, முழு முழுமையையும் எடுத்த பிறகும், முழுமையே எஞ்சியுள்ளது.

அதாவது, பூரணமான ஒன்று தீர்ந்து போகக் கூடியதன்று. இன்னமும் தெளிவானதொரு வார்த்தையால் குறிப்பிட வேண்டு மானால், பூரணமான ஒன்றை அழிக்கவே முடியாது.

அதாவது, <u>பூரணத்தை இருப்பற்று, இல்லாமல் போகச் செய்யவே முடியாது.</u>

இதை ஒரு எளிய உதாரணம் கொண்டு விளங்கிக் கொள்ள முயற்சிக்கலாம்.

ஒரு அறையில் ஒரு பெட்டியில் 10 மாம்பழங்கள் உள்ளன என்று வைத்துக் கொள்வோம். 10 பழங்களையும் யாருக்காவது எடுத்துக் கொடுத்தும் விடுகிறோம் என்று

வைத்துக் கொள்வோம். பின் அந்தப் பெட்டியில் மாம்பழம் என்றதொரு பொருள் இருக்குமா?

இருக்காதல்லவா?

தீர்ந்து போய் விடுமல்லவா?

இப்படித் தீர்ந்து விடுகின்ற பண்புள்ளதல்ல, நாம் கூறவருகின்ற 'பூரணம்' என்பது.

உண்மையில் மாம்பழமும் கூட, ஒரு இடத்திலிருந்து, மற்றொரு இடத்திற்கு இடப் பெயர்ச்சிதான் அடைந்துள்ளதே தவிர, அவைகள் இல்லாமலே போகவில்லை.

இடப்பெயர்ச்சிக்கும், சுத்தமாக இல்லாமலே போவ தற்கும் இடையே நிறைய வித்தியாசம் உள்ளது.

ஆனால், மாம்பழம் இருந்த பெட்டி மட்டும் அப்படியே இருக்கின்றது. தற்பொழுது, அதையும் எடுத்து யாருக்காவது கொடுத்து விடுகின்றோம் என்றால், இப்போது அந்த மாம்பழப் பெட்டி வைக்கப் பட்டிருந்த அறையும், அந்த அறையைத் தன்னுடன் இணைத்துக் கொண்டுள்ள கட்டிடமும் மட்டும் தான் இப்போது இருக்கும்.

கட்டிடத்தையும், இப்போது பொக்லைன் இயந்திரத்தின் துணை கொண்டு பெயர்த்து எடுத்து, மண்ணோடு மண்ணாக

மாற்றி விடுகின்றோம் என்று வைத்துக் கொள்வோம், பின் என்ன இருக்கும் அந்த இடத்தில்?

இப்படியே நீட்டித்துக் கொண்டு போனால், இதை இந்த முழுப் பூமிப்பந்திற்கும், பின் இந்த முழு சூரிய மண்டலம், பின் கண்ணுக்குத் தெரியும் இந்த முழுப் பிரபஞ்சத்தையும் கூட பெயர்த்தெடுத்து நீட்டித்துக் கொண்டே போகலாம்.

நான் இங்கு கூற வருவது, இப்படியே நீட்டித்துக் கொண்டே செல்வதையல்ல. அதாவது, '**முழுமையான உண்மை**' (absolute reality) என்பது என்ன? இந்த மொத்த பிரபஞ்சத்தின் கடைசி, இறுதி நிலை என்பது என்ன?

அதாவது, இங்கு உங்களுக்கு உணர்த்த வருவது, என்ன என்பதை இப்போதாவது புரிந்து கொள்ள முடியும் என்று நினைக்கிறேன்.

(ஒரு பாமரனும், பரமனைப் புரிந்துக் கொண்டு, அவனுடன் இரண்டறக் கலந்து விடுவதைப் பற்றி இங்கு கூறப் படுகின்றது.)

மாம்பழத்தில் ஆரம்பித்து, இந்த முழுப் பிரபஞ்சமும் கூட கடைசியாய் எதில் நிலை கொண்டிருக்கின்றன?

இதைத்தான் அன்றைய பெரியவர்கள் "**சுவரில்லாமல் சித்திரமா?**" என்றனர்.

ஏன் துணியில், பேனரில், பேப்பரில், கட்டவுட்டில் வரையலாமே என்ற விதண்டா வாதம் பேசாமல், அந்தப் பழமொழியில் உள்ள உட்பொருளை, தத்துவத்தை மட்டுமே பார்க்க வேண்டுகின்றேன்.

இன்றைய நவீன விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புகளைக் காணும் பொழுது, சுவரும், துணியும், காகிதமும், பேனரும் கூடத் தேவையில்லை. வெறும் காற்றுமண்டலமே கூடப் போதும்.

முப்பரிமாண ஹோலோகிராம் (3D Images) காட்சிகளை திரையில் ப்ரொஜெக்ட் செய்யும் சினிமாக் காட்சி போல, வெறும் காற்று வெளியிலேயே கூட காட்சிகளைக் காட்சியிட முடியும்.

சித்திரம் எழுதுவதற்கு எப்படி ஒரு சுவரோ, துணியோ, அல்லது காகிதமோ என ஏதாவது ஒரு பிண்ணனி அடிப்படைத் தேவையோ, அப்படித்தான் இந்த முழுப் பிரபஞ்சத்திற்கும் வெட்ட வெளிதான் அடிப்படை எனலாம்.

இந்த வெட்ட வெளிதான் அனைத்திற்கும் ஆதாரமாக உள்ளது.

நாம் ஏற்கனவே அறிந்துக் கொண்டது போன்று, மாம்பலத்தில் ஆரம்பித்து, பிரபஞ்சம் வரை எல்லாவற்றையும், இருந்த இடத்தில் இருந்து, மற்றொரு இடத்திற்கு இடமாற்றம்

செய்துக் கொண்டே போனாலும், இந்த வெட்டவெளியை விட்டு வெளியே போய்விட முடியுமா?

நன்கு யோசியுங்கள்!

அதாவது, இந்த வெளியை, நம்மால் இடப்பெயர்ச்சி (replace) செய்ய முடியுமா? என்றுதான் கேட்கிறேன்.

சரி! முழு வெளியைக்கூட வேண்டாம்.

முழு கடல் நீரில் சிலத் துளிகள் நீரை மட்டும் எப்படி ஒரு மாதிரிக்காக (சேம்பிளாகக்) பரிசோதனைக்கு கொள்கி றோமோ அப்படி, இந்த வெளியை உடைத்து எடுத்து, சிறு பகுதியை எதாவது பரிசோதனைக் கூடத்தில் வைத்து பரிசோதிக்க முடியுமா?

ஆகவே, இந்த வெளியின் ஒரு சிறு துரும்பைக்கூட நம்மால் இடமாற்றம் செய்ய முடியாது.

சரி! அப்படியே சிறு வெளியை மட்டும் எடுத்து இடமாற்றம் செய்து விடலாம் என்று ஒரு இடத்திலிருந்து, மற்றொரு இடத்திற்கு ஏதேனும் நவீன தொழில் நுட்பத்தின் வாயிலாகச் செய்து முடித்தாலும், பழைய இடத்தில் மீண்டும் ஒரு வெட்ட வெளி தோன்றாதா?

ஆகவே, இது சாத்தியமே ஆகாது.

ஏனெனில், நீர் உள்ள ஒரு பாத்திரத்தில் இருந்து அந்த நீரை மற்றொரு பாத்திரத்திற்கு மாற்றுவதற்காக வெளியே கொண்டு வந்து வேறொரு பாத்திரத்தில் சேமிக்கிறோம் என்றால், முதல் பாத்திரத்தில் உள்ள நீர் ஒரு கட்டத்தில், கட்டாயம் குறைந்து கொண்டே வந்து, பின் ஒரு கட்டத்தில் அந்த நீரே இல்லாமல்கூட போகும்.

இல்லாமல் போதல் என்றால், ஒன்றுமே இல்லாமல் போவதல்ல. முதல் பாத்திரத்திலிருந்து, இரண்டாம் பாத்திரத்திற்கு நீர் மாற்றப்பட்டுள்ளது என்றுதான் அர்த்தமே தவிர, சுத்தமாக நீரே இல்லாமல் போய்விட்டது என்பதல்ல. அதாவது நீர் இடமாற்றம் மட்டுமே செய்யப்பட்டுள்ளது.

அதுப்போன்று, வெளியை உடைத்து இடமாற்றம் செய்ய முடியமா? என்பதுதான் கேள்வி?

ஏற்கனவேயே வெளி பிளவுபடாத, கட்டுண்டு விடாத ஒரு வெட்ட வெளியாய் மட்டுமே எப்போதும் உள்ளது.

ஆனால் பிளவுபட்டுள்ளதாய், கட்டுண்டுள்ளதாய் நமக்குக் காட்சியளிப்பதெல்லாம் நமது புலன்களின், மனதின், அல்லது நமது அளக்கும் கருவிகளில் உள்ள குறைபாடு காரண மாகத்தான் அப்படித் தெரிகின்றது.

பொதுவாக, நீரை உடைக்க முடியுமா? என்று யாரும் கேட்பதில்லை?

ஏனெனில் நீர் என்பதே ஆக்ஸிஜன், ஹைட்ரஜன் என்ற இரண்டு வாயுப் பொருட்களின் கூட்டுக் கலவை என்பதுவும் அது 2:1 என்ற விகிதத்தில் இணையும் போது நீரின்; ஒரு மூலக்கூறு வடிவம் தோன்றுகிறது என்பதுவும் இன்று பள்ளிக் குழந்தைகளும் அறிந்து கொண்டுள்ள ஒரு எளிய உண்மை.

மொத்தத்தில் இறுதியாகத் தொகுத்துக் கூறுமிடத்து திட, திரவ, வாயுப் பொருட்களுக்கு பிளவு உண்டு. அதாவது, உடைபட்டத் தன்மை கொண்ட வரையறை என்ற ஒரு எல்லை உண்டு.

அவ்வாறே, பரந்து விரிந்த கடலிலிருந்து ஒரு துளி நீரைப் பிரிப்பது போல, எல்லையில்லாத இந்த வெளி யிலிருந்து ஒரு துளி, ஒரே ஒரு துளியின் துளி அல்லது அணுவளவு ஆகாயத்தையாவது, அதாவது வெளியையாவது மொத்த வெளியிலிருந்து பிரிக்க முடியுமா?

பருப் பொருட்களில் அடிப்படைத் துகள்களில் ஆரம்பித்து, யூரேனியம் போன்ற கனத் தனிமங்கள் வரை, எப்படி ஒரு படிநிலை இருக்கிறதோ, அப்படி ஒரு படிநிலை, ஏன் வெட்ட வெளியின் அமைப்பிலும் இருக்கக் கூடாது?

பருப் பொருள் மட்டத்தில் பொருளில் உள்ள 3 படிநிலையான திட, திரவ, வாயு பொருட்களில் திடமும், திரவமும் மட்டுமே கண்ணுக்குப் புலனாகக் கூடிய பொருட்களாகும்.

வாயு நிலையை எட்டிய ஒரு பொருள் கண்ணுக்கு புலனாகும் தன்மையை இழந்து விடுகிறது. இதே போன்ற, இதையொத்த ஒரு சில பொருட்களின் பருமன் அணுவுக்கு அணுவாய் சுருங்கும் பொழுது, கண்ணிற்குத் தெரியாமல் போவதைக் காணலாம்.

குவாண்டம் உலகம் எனப்படும், அந்த நுண் உலகில் தான் அணு, அணுக்களுக்கான அடிப்படைத் துகள்களின் (அதம அணுக்களின்) என, நுண் உலகச் சாம்ராஜ்யமே இருக்கின்றது.

இதுவும் குவாண்ட உலகம் என்ற நாமகரணத்தோடு அதற்கே உரிய பௌதிக விதிகளால் ஆளப்படுவதாய் அறிவியல் அறிஞர்களால் அறியப்பட்டுள்ளது.

அத்தகைய க்வாண்டம் உலகில்தான், பொருட்கள் முதன் முதலாக, தங்களது நுண்ணிய துகள் தன்மையை மட்டும் வெளிப்படுத்துவதாய் இல்லாமல், அத்துடன் அலைப் பண்புகளையும் வெளிப்படுத்துவதாய் அமையப் பெற்றுள்ளது.

அதாவது பொருட்களின் அலைப்பண்பும், துகள்பண்பும் சங்கமமாகும் ஒரு பொது இடமாய் இந்த வெட்டவெளி காட்சியளிக்கிறது.

இந்த இடத்தில் ஒரு புரிதலுக்காக பொருட்களின் அலை வடிவத்தை திரவமாகவும், துகள் வடிவத்தை திடமாகவும் பாவித்தோமோனால், அப்போது அங்கு ஒரு வாயு

போன்ற இன்னொரு அரூப நிலை வடிவம் ஏன் இருக்கக் கூடாது?

வெளியின் திரிந்த, நசுங்கிய வடிவத்தின் எளிமையான, இன்னொரு நிலையாய் அது ஏன் இருக்கக் கூடாது?

பருப்பொருள் என்பதே வெளியின் ஒரு திரிந்த (திரிபடைந்த, மாற்றமடைந்த என்ற பொருளில்), நசுங்கிய வடிவம்தான் என்றால் திரிபின், நசுக்கத்தின், அளவினைப் பொறுத்து சுத்தமான வெட்ட வெளியின் இந்த அமைப்பிலும் ஏன் பல படிநிலைகள் இருக்கக் கூடாது?.

இதைப் புரிந்து கொள்வதற்காக இன்னும் எளிமையான உவமானம் ஒன்றின் வழியாகக் கூற வேண்டுமானால் அடர்த்தி என்ற பண்பைக் குறிப்பிடலாம்.

பொதுவாக திட, திரவ, வாயுப் பொருட்களுக்கு மட்டுமே நாம் இது வரைக் கற்பித்து வந்த அடர்த்தி என்ற பண்பு ஏன் வெளிக்கும் இருப்பதாய் பாவித்துப் பார்க்கக் கூடாது?

அடர்த்தி என்றால் அப்படியே அடர்த்தி என்ற பொருளில் அல்ல. அதையொட்டிய சற்றேறக் குறைய அதே போன்ற ஒரு தன்மை ஏன் வெட்ட வெளிக்குள்ளும் நாம் எதிர்பாரக்கக் கூடாது?

பிளவுபட்ட நிலை, உடைபட்ட நிலை என்பது எல்லாம் ஒரு வகையில் அணுக்களின் செறிவு, அடர்த்தி என்பதோடு (மறைமுகமாவாவது) சம்பந்தம் கொண்டவை தானே?

பருப் பொருட்களின் ராஜ்ஜியம் 10-15 செ.மீட்டரிலேயே முடிந்து விடுவதால் அங்கிருந்து தொடங்கும் நுண் க்வாண்ட உலகம் இன்னும் நுண்மையானதொரு எல்லையில் கூட முடியக் கூடலாம் யார் கண்டது?

அத்தகைய நுண் நிலையைக் கண்டறிவதற்கான வசதி வாய்ப்புகளும், அதற்கேற்ற மேம்பட்டத் தொழில் நுட்ப வசதிகளும் இன்றைய நிலையில் இல்லாமல், இன்னமும் கண்டு பிடிக்கப்படாமல் கூட இருக்கலாம்.

அதாவது, சுத்தமான வெட்டவெளி என்று நாம் இது வரை கருதிக் கொண்டு வருவது, பருப் பொருள் அடைத்து ஆக்ரமித்துக் கொள்ளாத வெளியின் முதல் படிநிலையையோ அல்லது அப்படிப்பட்ட படிநிலைகளின் முதல் சில படி நிலை களையோதான் என்பதாகக் கூடக் கருதிக் கொள்ளலாம்.

அதற்கும் அப்பால் உள்ள க்வாண்ட உலகம் வரை உள்ள நிலையில், மேலும் பல எண்ணற்ற படிநிலைகளும் கூட இருக்க நேரிடலாம்.

அப்படி பாவித்துக் கொண்டால், அந்த சுத்த வெட்ட வெளியின் முதல் படிலை நிலைக்கு அப்பாலோ அல்லது முதல் சில படி நிலைகளுக்கு அப்பாலோ உள்ள ஒரு

நிலையிலிருந்து க்வாண்ட உலகம் வரை உள்ள பல எண்ணற்ற படிநிலைகளையே இனிமேல் தான் விஞ்ஞானம் கண்டுபிடிக்க வேண்டும் எனும் ஒரு நிலை கூட உருவாகலாம்.

அந்த வகையில் பொருளின் (Matter) சக்தி (Energy) நிலைகளில் ஒன்றான அலைப்பண்பு என்பதுவும் கூட, ஒரு வகையில் நுண்வெளியின் ஒரு வகைப்பட்ட நசுங்கிய வடிவம் தான் என கூட நாளை வரும் எதிர் கால விஞ்ஞானம் நிரூபிக்கக் கூடும்.

அப்படி நிரூபிக்கப்படும் போது மட்டும்தான், அப்போது தான் நசுக்கமே, திரிபே பெறாத, ஒரு சுத்த வெட்ட வெளியைப் பற்றிய ஒரு உண்மையான தேடல் தொடங்கும்.

அந்த எல்லை எங்கிருந்து தொடங்குகிறது? எது வரை அதன் விதிகள் வியாபித்துள்ளன? எங்கிருந்து அதன் முதல் நசுக்கச் சுருக்கம் தொடங்குகிறது. நசுங்கிய வெளியின் நசுக்கச் சுருக்கத்தை அளவிட முடியுமா?

இது போன்ற கேள்விகளுக்கு பதில் கிடைக்கும் போது தான் உண்மையிலேயே வெளி ஏற்கனவேயே உடைபட்டு விட்ட ஒன்றா? அல்லது அது எப்பொழுதும் உடைபடவே முடியாத ஒரு முழு அமைப்பா? என்பது பற்றி எல்லாம் ஒரு தெளிவு பிறக்கும்?

எல்லையற்றது இரண்டாய் இருக்க முடியாது, எனும் ஸ்வாமி விவேகானந்தரின் கூற்றும், இங்கு சற்று யோசிக்கத் தக்கது.

ஏனெனில், எல்லையற்ற ஒன்று எப்போதும் உடைபட்டு பிளவுபட்டு, பின்னப்பட்டும் இருக்க முடியவே முடியாது.

தர்க்க ரீதியாக எல்லையற்றது என்பது, எப்போதும் ஒருமைப்பட்டு இரண்டற்றதாய் மட்டுமே இருக்க முடியும்.

இதுவே அத்வைத நிலைபாடு.

## 10. நிர்குண ப்ரஹ்மமும், சகுண ப்ரஹ்மமும்

அதாவது இருப்பது ஒன்றா?! பலவா?!

எல்லையற்ற இரண்டு இருக்க முடியாது என்ற அடிப்படையான விஷயங்களுக்கே மீண்டும் இந்த ஆய்வு நம்மை இழுத்து வருதுகிறது.

இதுதான் அணுக்கள் மட்டத்தில் குவாண்ட உலக மட்டத்துக்குள் செல்லுகையில், பொருளுக்கும் (Matter), சக்திக்கும் (Energy) பொருந்தும் நியூட்டனின் ஆற்றல் மாறாக்

கோட்பாடு, ஒரு வகையில் வெளிக்கும் கூடப் பொருந்தும் என்பதாகத்தான் தோன்றுகின்றது.

வெளியை உரு மாற்றம் செய்யலாமே தவிர, வெளியை புதிதாக ஆக்கவோ, உருவாக்கவோ, உடைக்கவோ, அழிக்க வோ முடியாது என்பது தானே இதன் பொருள்.

அப்படிப்பட்ட வெட்டவெளிதான் ப்ரஹ்மம். அந்த "**ப்ரஹ்மமே நான்**" என்கின்ற பொழுது, என்னை நான் அழிகின்ற இந்த அற்ப உடலாகவும், உலகம் உண்மையாகவும் கருத முடியுமா?

இதை இன்னும் கொஞ்ச எளிய உதாரணம் கொண்டு புரிய வைக்க வேண்டுமானால், ஒரு கணினியின் (Computer) ஒரு மென்பொருள் (Windows) எடுத்துக் கொள்வோம்.

அதில் ஏதாவது பதிவிறக்கம் செய்ய வேண்டுமாயின், (Download) டவுண்லோடு ஆகிக் கொண்டிருக்கும் போதே, மற்றொரு விண்டோவைத் திறந்து, இன்னொரு வேலையைச் செய்கிறோம்.

அந்தச்செயல் நடந்து கொண்டிருக்கும் போதே, அதே நிலையிலேயே இன்னொரு வேலையை, மீண்டும் இன்னொரு விண்டோவைத் திறந்து செய்கிறோம்.

ஆனால், அவை அனைத்தும் எப்படி ஒரே கணினியின் திரையிலிருந்தே (Computer Screen) தோன்றியதோ,

அவ்வாறே கிட்டத்தட்ட இதே போன்றே விண்வெளியிலும் கண்ணுக்குப் புலனாகும் அனைத்துப் பருப்பொருட்களுமே, ஒரு வகையில் ஒரு நவீனக் கணினியின் ஒரு விண்டோ மென்பொருள் போலத்தான்.

**வெட்டவெளி தான் இங்கு திரை (Monitor).**

ஒன்றுக்குள் ஒன்றாக ஸூப்பர் இம்போஸ் செய்தது போல, இந்த மாபெரும் பிரபஞ்சமே, வெட்ட வெளிக் குள்ளிருந்தே கிளம்பி வந்துள்ளன.

ஆக, பூஜ்ஜியம், ஸைபர், பூரணம் என்ற இந்தப் பல பெயர்களும், ஒரு பொருளைச் சுட்டிக் காட்டுவதற்குத்தான் எனலாம்.

அது அந்த வெட்ட வெளியையே.

பூஜ்ஜியம் என்பது, திரையரங்கில் இருக்கும் ஒரு வெள்ளைத்திரைப் போன்றது. அந்த வெள்ளைத் திரையை படம் போடும் போது மட்டுமே வெளிப்படுத்துவார்கள்.

அதுவரை அதன் முன்னால் மற்றொரு அழகுப் படுத்தப்பட்ட திரை அதை மூடி அலங்கரித்துக் கொண்டு இருக்கும்.

(இவ்வாறுதான் நாம் அந்த வெள்ளைத் திரையைப் போன்ற பிரஹ்மத்தை அறிய முடியாமல், அழகான மாயத்

திரை என்ற இந்தப் பிரபஞ்சம் நமக்கு முன்னால் இருந்துக் கொண்டு அந்த ப்ரஹ்மத்தை அறிய முடியாமல் அழங்கரித்துக் கொண்டு நம் கண்களை ஏமாற்றி மறைத்துக் கொண்டுள்ளது.)

அதாவது, உண்மைக்கும் நமக்கும் இடையிலே உள்ள ஒரு மாயத் திரைப் போன்றதுதான் இந்த மனம். இந்த மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்கள் மேலும் அந்த வெள்ளைத் திரையை மறைக்கும் பல்வேறு திரைகள் எனலாம்.

அந்த எண்ணங்கள் என்ற திரைகளை ஒவ்வொன்றாய் கிழித்துக் கொண்டே சென்றோமேயானால், எஞ்சுவது குணங்களற்ற உண்மையேயான அந்த கலங்கமற்ற திரையாய் விளங்கும் பிரம்மம் மட்டுமே.

அதுவே ஆகாஷம். அதுவே வெட்டவெளி.

அதாவது சனாதன தர்மம் கொடுத்த சாஸ்திரத்தின் பாஷையில் கூறுவது என்றால் 'நிர்க்குணப் பிரம்மம்' எனலாம்.

இந்த நிர்குண ப்ரஹ்மத்தை, பூஜ்ஜியம் என்று வைத்துக் கொண்டால், சகுண பிரம்மத்தை எண்களாக, பொருட்களாக வைத்துக் கொள்ளலாம்.

அந்த வகையிலே, உருவமற்ற, குணங்களற்ற, நிர்குணப் பிரஹ்மத்தை அறிந்து அனுபவமாக வேண்டுமானால், நாமும் பூஜ்ஜியம் ஆகிவிட வேண்டும்.

பூஜ்ஜியம் ஆகிவிடவேண்டும் என்றால், ஒன்றுமில்லாத சூன்யம் ஆகிவிட வேண்டும் என்று பொருள் கொள்ளக் கூடாது. எல்லையில்லாத பேரறிவாக அந்த நிர்குண ப்ரஹ்மமாக மாறி விட வேண்டும்.

எப்படி?

இங்கு கூறப்படும் விளக்கத்தை சற்று ஆழ்ந்து கவனித்து கற்றுக் கொள்ளுங்கள்.

எங்கும் நிறைந்த வெட்டவெளியே ப்ரஹ்மம் என்பதாயின், நானே ப்ரஹ்மம் எனும் பொழுது, நானும் இந்த வெட்டவெளி என்ற உண்மை விளங்கும்.

அதன் அடிப்படையில், நமது உடலுக்குள்ளே உள்ள உணர்வு வெளியைத்தான் நாம் “**சிதாகாசம்**” (அறிவாகாசம்) என்கின்றோம்.

அவ்வாறே, உடலுக்கு வெளியே உள்ள ஆகாசத்தை மகாகாசம் என்ற ஐந்து பூதங்களாலான பௌதிக உலகம் என்றும், இந்த உலகமும், உயிர்களும் என்னிலிருந்து வேறல்ல என்ற அன்பின் எல்லையற்ற விரிவை பிரேமாகாசம் என்றும், அடுத்து, இந்த அனைத்தையும் கடந்த, அனைத்தையும் தன்னுள் அடக்கிய, முதலும் முடிவுமற்ற பரப்பிரம்மமே (வெட்ட வெளியே) பரமாகாசம் என்றும் அறியவும்.

இதிலே, நாம் இன்னும் உடல் என்ற உணர்ச்சியைக் கடக்க முடியாத, அற்ப ஆறறிவு படைத்த மனிதன் என்று எண்ணிக் கொண்டிருக்கின்ற வரையிலும், சிதாகாசம் என்ற உணர்வு வெளியையே தொடமுடியாமல் இருக்கின்றது.

இதனைக் கடந்து, '**இருப்பதெல்லாம் இறைவனே**' என்ற பஞ்ச பூதங்களால் ஆன ஈஸ்வரனை (பௌதீக உலகை) **மகாகாசமாக** உணர்ந்து, இந்த ஈஸ்வரன் என்ற பௌதீக உலகம் '**மாயை**' என்ற புரிதல் வந்து, உலகப் பொருட்களை சுய நலத்துடன் அடைய வேண்டும் என்ற ஆசைகளை விடுத்து, அவைகள் தன்னிலிருந்து வேறாக இல்லை என்ற அன்பு உண்டாவதே அநன்ய பக்தியாகிய **பிரேமாகாசம்** என்பதை உணர்ந்து, அதற்கு அடுத்து உள்ள ப்ரஹ்மமாகிய **பரமாகாசம்** ஆகிய தன் சொரூபத்தில் நிலை நிற்பதுவே மிக உயந்த ஆன்ம அனுபவம் என்று அறிய வேண்டும்.

இந்த ப்ரஹ்ம அனுபவத்திற்கு, அதாவது, வெட்டவெளி அனுபவத்திற்கு வருவதாக இருந்தால், முதலில் தன் உள் உணர்வு நிலையாகிய சிதாகசத்தை அறிய வேண்டி, வெளியே உருவமுள்ள, முக்குணங்களை உடைய சகுண பிரஹ்மத்தை வெறும் கை எடுத்துக் கும்பிட்டுக் கொண்டு வழிபடுவதைக் காட்டிலும், அவைகளை இருமைகளற்ற அநன்ய பக்தியினால் அன்பு செய்வதினால் மட்டுமே, நம்முடைய உண்மை சொரூபம் நமக்கு அனுபவமாகும் என்பதை அறிந்து, அதுவே, சாத்தியம், அதுவே சத்தியமான அந்த நிர்குண ப்ரஹ்ம நிலை என்பதை அறிய வேண்டும்.

**(சகுணப் பிரம்மம் குணங்களோடு கூடியது. நிர்க்குணப் பிரம்மம் குணங்களற்றது. இறைவன் ஒரே நேரத்தில் இரண்டுமாகவும் இருக்கிறார் என்பதை ஆதிகுரு தக்ஷிணாமூர்த்தி தனது வலது கரத்தில் சின்முத்திரையைக் காட்டி, ஆள்காட்டி விரலும், கட்டை விரலும் சேர்ந்து உருட்டி பூஜ்ஜியத்தைக் காட்டுவதை, அனைத்தும் அடங்கிய வெட்டவெளி என்ற பேரறிவு நிலையில் நான் பூரணமான நிர்குண ப்ரஹ்மமாகவே இருக்கின்றேன் என்றும், அருகே மூன்று விரல்களை விரித்துக் காட்டி நானே மூன்று குணங்களை உடைய சகுண ப்ரஹ்மமாகவும் உருவத்தில் ஈஸ்வரனாக இருக்கின்றேன் என்றும் உபதேசிகின்றார். அந்த வகையிலே, உருவத்தில் அஞ்ஞானிகளுக்கும், அருவத்தில் ஞானிகளுக்கும் அந்த பிரஹ்மம் அனுபவமாகின்றது.)***

தனித்த பூஜ்ஜியத்திற்கு எங்கேனும் இயக்கப் பண்பு உண்டா என்ன?

ஆகவே, தனித்த பூஜ்ஜியம் அசைவற்ற பிரஹ்மம். அதனுடன் மாயையாகிய எண்(ணங்)கள் சேரும்பொழுது, அது மதிப்பிடப்பட வேண்டி சக்தியாக அமைகின்றது. எண்களின் மாறுபாட்டின் காரணமாக அசைகின்றது. அசைகின்ற அந்த சக்தியே ஈஸ்வரன்.

எண்களுக்குத்தான் கூட்டல், கழித்தல் குறிகள் உண்டு. பூஜ்ஜியத்திற்கு எங்கேனும் கழித்தல் பூஜ்ஜியம் (-), கூட்டல் பூஜ்ஜியம் (+) எனக் குறியிடப்பட்டு பயன்படுத்தியதை நாம் கண்டு கேள்விப் பட்டதுண்டா?

ஆகவே, எதனுடனும் மதிப்பிடமுடியாத மகத்தான பூஜ்ஜியமே பூரணம், அந்த பூரணமே ப்ரஹ்மம். ப்ரஹ்மமே வெட்டவெளி. அந்த வெட்ட வெளியே "**நான்**" என்று அறிந்துக் கொண்டால், அந்த அறிவே '**சித்**'. அது நடனமாடும் உணர்வுவெளிதான் (**அம்பலம்**). அதுவே **சிற்றம்பலம்**.

இதைத்தான், சித்தாகிய இறைவன் (திரு) நடனமிடும் ஆகாயமே (அம்பலமே) '**திருச்சிற்றம்பலம்**' என்று அறிக.

அதைவிடுத்து, வெறும் வாய் வார்த்தையினால், '**திருச்சிற்றம்பலம்**' என்று கூறிக் கொண்டிருப்பது இறைவனை அறியாத மூட பக்திக்கு ஒப்பாகும்.

இந்த அறிவு ஆகாசத்தில் (சிதாகாசத்தில்) விழித்துக் கொண்டவருக்கு, உள்ளும், புறமும் ஒன்றேயான '**வெட்டவெளி**' மட்டும்தான் முழுமை.

அந்த முழுமையே இறைவன். அந்த இறைவன் சொரூபமே என் உண்மைச் சொரூபம் என்று அறிய முடியும்.

வெட்டவெளி பூஜ்ஜியம், சூன்யம், ப்ரஹ்மம், அறிவு என்பதெல்லாம் வெறும் நாமங்கள் (பெயர்கள்) மட்டுமே.

நாமங்களிலும், ரூபங்களிலும் சிக்கிக் கொண்டு இருப்பதைத் தவிர்த்து, அந்த ஏக இறைவனை நம் நேரடி

அனுபவமாக்குவது எவ்வாறு? என்று அறிவதே பகுத்தறிவு படைத்த மனித தேகத்தின் மகத்துவம் என்றும் அறிக.

நாமமும், ரூபமும் இல்லாத அந்த அன்பு உணர்வு வெளிப்படுகின்றது அல்லவா? அது மட்டுமே தூய்மையான பேருணர்வு. அதுவே சத்தியம், நித்யம், அனந்தம், அகண்டம், ஆனந்தம்.

அந்த உணர்வு மையம் விழிப்படைய வேண்டுமானால், தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்ற, இருமைகள் அற்ற அபேத அன்பே, உண்மையான தூய அன்பு. அந்த அன்பு வெளிப்படுவதே ஆன்மாவின் நேரடி அனுபவம்.

அது நம்முடைய இயல்பு, அது நம்முடைய சொரூபம். அது நம்முடைய உணர்வு. அது நம்முடைய அறிவு.

நமக்கு வேறாக எதுவுமே கிடையாது. இருப்பதாகத் தெரிவதெல்லாம் உள்ளுணர்வின் அறிவுப் பிரகாசம். அதாவது, அனைத்தையும் அறியும் அறிவு. அதுவே நான்.

அந்த “**நான்**” இருப்பதினாலேயே, அனைத்தையும் அறிய முடிகின்றது.

அதாவது எனது உணர்வு மையமே அவ்வாறு அனைத்தையும் என்னுள்ளேயே அறிகின்றது. அது எனக்கு வேறாக எப்பொழுதும் இல்லை.

இதை ஒரு எளிய உதாரணத்தின் முலம் அறியலாம்.

அதாவது, ஒன்றுமற்ற வெள்ளைத்திரை ஒன்று உள்ளது. அதற்கு அசைவுகள் ஏதும் கிடையாது.

ஆனால், அதன்மீது ப்ரொஜெக்டரில் இருந்து வெளிப் படுகின்ற படம் ஓடுகின்றது, அது வெள்ளைத் திரையில் பிம்பிக்கின்றது. அதிலேயே அனைத்து காட்சிகளுமே காணப்படுகின்றது.

அதாவது, சண்டை, சோகம், காதல், கோபம், அன்பு, மகிழ்ச்சி என பலவாறான தோற்ற மாயைகள் அந்த திரையில் பிம்பிக்கின்றது.

ஆனால், அவைகளால் அந்த திரை ஒருபொழுதும் பாதிக்கப்படாது. மேலும், அந்த அனுபவங்கள் எதுவுமே அந்த ஒன்றுமற்ற கலங்கமற்ற திரையினுடைய சொந்த அனுபவங்கள் கிடையாது.

அந்த கலங்கமற்ற வெள்ளைத் திரை எதனாலும் பாதிக்கப்படாதது. தூய்மையானது. தன்னில் தானாய் இருப்பு கொண்டுள்ளது. அது இருப்பதினால்தான் அதன் மீது படம் ஓடுகின்றது.

இதுவரை கூறப்பட்டது, ஒரு திரையரங்கத்தில் உள்ள ஜடமான வெள்ளைத் திரையைப் பற்றியதாகும்.

இனி, ஆன்மா என்றொரு வெள்ளைத்திரை உள்ளது. அதற்கு அசைவுகள் ஏதும் கிடையாது.

ஆனால் அதற்கு அறிவு உண்டு. அதன் வயிலாகவே, அதன்மீது ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்கள் என்ற பிலிம் ரோல்கள் வாயிலாக, மனம் என்ற ப்ரொஜக்டரில் இருந்து படங்கள் (எண்ணங்கள்) வெளிப்படுகின்றது.

அந்த ஆன்மா என்ற கலங்கமற்ற, தூய்மையான வெள்ளைத்திரையின் மீது அந்த படங்கள் ஓடுகின்றது,

அதிலே காட்சிகள் விரிகின்றது. சண்டை, சோகம், காதல், அன்பு, மகிழ்ச்சி என பலவாறான தோற்ற மாயைகள் அந்த வெள்ளைத் திரையில் பிம்பிக்கின்றது.

ஆனால், அவைகளால் அந்த வெள்ளைத் திரை ஒருபொழுதும் பாதிக்கப்படாது.

மேலும், அந்த அனுபவங்கள் எதுவுமே அந்த ஒன்றுமற்ற கலங்கமற்ற திரையினுடைய சொந்த அனுபவங்கள் கிடையாது.

அந்த கலங்கமற்ற வெள்ளை நிறமுடைய ஆன்மத் திரையோ எதனாலும் பாதிக்கப்படாதது, தூய்மையானது. அது தன்னில் தானாய் இருப்பு கொண்டது. அது இருப்பதினால்தான் அதன் மீது மனம் என்ற எண்ணங்கள் படமாக ஓடுகின்றது.

ஆனால், இந்த ஆன்மத் திரை அறிவுடையது, உணர்வுடையது. ஆதலால், இதற்கு வேறாக எதுவுமே அங்கு திரையிடப்பட முடியாது.

அனைத்தையும் அது சாக்ஷியாகப் பார்த்துக் கொண்டே இருக்கின்றது. அனைத்து அனுபவங்களும் அந்த ஆன்ம திரைக்கு உண்டாவதுப் போன்று காணப்படுகின்றது.

ஆனால், அதற்கு உண்டாகும் அனுபவங்கள் அனைத்துமே அதன் மீது ஏற்றிவைக்கப்பட்ட ப்ரொஜெக்டரில் இருந்து (மனதில்) வெளிப்படுகின்ற படங்களைச் சார்ந்தது.

ஆனால், அந்த படங்கள் அந்த ஆன்மாவை (திரையை) பாதிக்காது.

அந்த வகையிலே, இங்கும் அந்த மனமே அன்பு (பக்தி) செய்கின்றது. அந்த அன்பு (பக்தி) சுய நல அன்பாக இருந்தால், அந்த மனம் தன்னை அறிய முடியாமல் அல்லல் படுகின்றது.

அதுவே, தனக்கு வேறாக ஒன்றுமே இல்லை என்ற அடைந்த அறிவால், அதாவது ஆத்ம ஞானத்தின் வாயிலாக, அதே மனம் தனக்கு வேறாக எதையும் பார்க்காமல், அனைத்தையும் தன்னில் தானாய்ப் பார்த்து, அவைகளை அன்பு செய்கின்ற பொழுது, அந்த பக்தி இரண்டற்ற அநன்ய பக்தியாக மாறிவிடுகின்றது.

இந்த அன்பினாலேயே, அதாவது இந்த அநன்ய பக்தியினாலேயே, ஆன்மாவிற்கு வேறாக பிரதிபிமித்த மனம் மீண்டும் அந்த ஆன்மாவிலேயே தன்னில் தானாய் கரைந்து விடுகின்றது.

அதன் பிறகு அங்கே, இருப்பு கொண்டிருப்பது வெறுமையான, வெள்ளையான, ஒன்று மற்ற வெட்டவெளி என்ற ஆன்மா (திரை) மட்டுமே. அதற்கென்று, எந்த ஒரு அனுபவமும் கிடையாது.

அது அசைவற்றது. அனைத்தையும் தனக்கு வேறாக பிரதிபிம்பித்துப் பார்க்கின்ற அறிவு மட்டும் உடையது.

அதுவே இறைவன்! அதுவே ஆன்மா! அதுவே நான்!

இதுவே ஆன்ம அனுபவம், இதை அடைவதே ஆனந்தம்.

இதை அறிவதே அறிவு.

## 11. இணையதளமும், இன்றைய கல்வியும்!

இந்த ஆன்ம ஞான சூக்ஷுமங்கள் சத்குருவை முழுமையாக சரணடைந்தவர்களுக்கு மட்டுமே மிக எளிதாகப் புரிகின்றது. அவரது பூரண அன்பினால் கிடைக்கும் ஆனந்த

உபதேசமே, மிக உயர்ந்த நிலைக்கு, அந்தச் சாதகனைக் கொண்டு சேர்க்கின்றது.

அதனால்தான் சாஸ்திரம் கற்பதற்கு வருகின்ற மாணவன், கற்றுக் கொடுக்கின்ற சத்குருவை தந்தையாக ஏற்பதும், சத்குருவும் தன்னிடம் சரணடைந்த மாணவனை, மகனாக ஏற்பதுவும் என்பது, இவர்கள் இருவருக்குள்ளும் ஒரு புரிதலை உண்டாக்கி, ஒருவருக்கு, ஒருவர் உண்மையான அன்பை பகிர்ந்துக் கொண்டு, ஒரே குடும்பமாக (வசுதைவ குடும்பகம்), தூய அன்பில் இருந்து கற்பது மட்டும்தான், இந்த பாடங்களை கற்கின்ற மாணவர்களுக்கும், கற்றுக் கொடுக்கின்ற ஆசிரியருக்கும் பாலமாக அமைகின்றது.

அந்த அன்பு ஒன்றுமட்டும்தான் அவர்களை ஒன்றாய் இணைக்கின்றது. இந்தக் கல்வி முறை ஆதியில் ஓலைச் சுவடியின் வாயிலாக போதிக்கப்பட்டு, நாளடைவில் விஞ்ஞான வளர்ச்சியில் பேப்பர்கள் கிடைத்து, புத்தகங்களாக மாற்றி கற்றுக் கொண்டு வந்த சூழ்நிலையில், இன்று நம் நடைமுறை காலத்திலேயே விஞ்ஞானம் மேலும் வளர்ச்சி அடைந்து, நமக்கு பல்வேறு மின் புத்தகங்களாக (e-Books) ஒரே கிண்டில் (Kindle) என்ற மின் அணு (Electronics) உபகரணத்தின் உள்ளே பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட புத்தகங்களை வைத்துக் கொண்டு படிக்கக் கூடிய மிக நவீன மின் சாதனங்களும், இணையதளங்களும் என, நம் உள்ளங்கையில் இந்த உலகம் இருக்கின்றது.




இவைகள், நவீன விஞ்ஞானத்தின் மிகச்சிறந்த வளர்ச்சி. இதுப்போன்ற நன்மைகளை அளிக்கும் விஞ்ஞானிகளின் முயற்சி வரவேற்கத்தக்கது. இதுவும், அந்த மெய்பொருளின் அறிவுப் பிரகாசம்தான். இதைக் கண்டறிந்த விஞ்ஞானிக்கு வேண்டுமானால், நான்தான் கண்டுபிடித்தேன் என்ற பெருமை இருக்கலாம்.

ஆனால், இதைக் கண்டுபிடிக்க காரணமாக இருந்த ஒன்று அவன் உள்ளே இருப்பதை அவனே அறியாமல் இருந்தாலும், அதுஒன்றே அவன் (விஞ்ஞானி) முதற்கொண்டு, அவனது கண்டுபிடிப்புகளான அனைத்து உபகரணங்கள் என, இங்கு ஸ்தூலத்தில் ‘**இருப்பு**’ கொள்ளச் செய்கின்றது என்பதை அவசியம் அறிய வேண்டும்.

அதாவது, அந்த விஞ்ஞானியின் மனதில் ஒரு பொருளை உதிக்க வைத்து, அதை நடைமுறையில் இந்த பிரபஞ்சத்தில் கொண்டு வந்து சேர்க்கின்றதும், சேர்த்த

பொருளை அனுபவிப்பதும், சேர்க்கப்பட்ட பொருளாகவே தானே இருப்பதும் என எல்லாமாக அந்த இருப்பே இருக்கின்றது என்பதை அறியவும்.

ஆகவே, இங்கு **அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு** எல்லாம் ஒன்றே, என்பதை ஏற்கனவே படித்ததில் இருந்து மறந்து விடக்கூடாது.

இதை அறியாத காரணத்தினால்தான் இந்த பிரபஞ்சம் எப்படி காட்சிக்கு இருக்கின்றது என்ற கேள்வி எழுகின்றது.

இந்த காட்சி ஒன்றேயான அந்த உள்ளுணர்வின் வெளிப்பாடு என்றும், அதுவே அறிகின்ற அறிவாகவும், அறியப்படும் பொருளாகவும், அறிபவனாகவும் இருக்கின்றது என்றும் அறிவதே இங்கு '**ஞானம்**' எனப்படுகின்றது.

அதனால்தான் அனைவராலும் இந்த ஞான மார்க்கத் திற்குள் அவ்வளவு எளிதாக வர முடிவதில்லை. மனிதனாகப் பிறந்தவர்கள் அனைவருமே ஆறு அறிவுகளையும் மிகச் சரியாகப் பயன்படுத்துகின்றனர் என்று கூற முடியாது.

பிறப்பு மனிதனாக இருக்கலாம், ஆனால் வளர்ப்பு?

எனவே, இங்கு ஒவ்வொரு உடலும், ஒவ்வொரு தனி மனம் என்பதை நன்கு புரிந்துக் கொள்ளுங்கள்.

அதாவது, சாஸ்திரத்தில் கூறப்படுகின்ற ஈஸ்வரன் என்பவனின் '**விராட்**' சொரூபம் என்ற இந்த மொத்தப் பிரபஞ்சமும், அவனது "**சமஸ்டி சரீரம்**" என்றால், இதில்

காணப்படுகின்ற அத்தனை வஸ்துக்களும், அதாவது, பிரபஞ்சத்தில் காணப்படுகின்ற தனித்தனி ஜீவனும் “**விஸ்வன்**” என்ற, உடலாகிய “**வியஸ்டி சரீரம்**” என்பதினால், நம்முடைய தனி உடல் என்பது, நம்மைப் பொருத்தவரை பல்வேறு எண்ணங்களைக் கொண்ட ஒரு ஸ்தூலமான உடலாகக் காட்சிக்கு காணப்பட்டாலும், ஈஸ்வரனின் சூக்ஷுமமான மனம் என்பதையும் அறியவும்.

அதாவது, சமஸ்டி ஈஸ்வரனைப் பொறுத்தவரை வியஸ்டி ஜீவன் என்பவன், அந்த ஈஸ்வரனின் தனித்த ஒரு எண்ணம் எனலாம்.

இவ்வாறு பல்வேறு ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களை ஒட்டுமொத்தமாக உள்ளடக்கிய நம்முடைய மனம் என்பது, ஈஸ்வரனின் சமஸ்டி சரீரத்தில் அடங்குவதால், ஒரு வகையில், நாம் நம்மை அறியாமலேயே, அவனது விருப்பத்திற்கு (பிரபஞ்ச மனதிற்கு) உட்படுகின்றோம்.

அதாவது, அந்த எண்ணங்களை ‘**ஈஸ்வர சங்கல்பம்**’ என்கின்றோம்.

இங்கு ஒரு விசயத்தை நினைவில் கொள்ளுங்கள். இதுப்போன்ற பாடங்களை இணையத்தில் கொடுக்கப்படுவதும் ஈஸ்வர சங்கல்பம் எனப்படும்.

ஏன்?

கர்ம பலதாதாவாகிய ஈஸ்வரன் தகுதியான அதிகாரிகளுக்கு அவர்களின் புண்ணிய பலனின் காரணமாக

எப்படியாவது பலன்களைக் கொடுக்கும் பொருட்டு, இந்த பாடங்களை இத்தகைய நவீன தொழில் நுட்பத்தின் வாயிலாக இன்று இணையத்தின் வாயிலாக அவசியமான அதிகாரிகளுக்கு (முமுக்ஷுக்களுக்கு) கொண்டு சேர்க்கின்றான் என்பதையும் அறியவும்.

தற்பொழுது, இதுப்போன்ற வேதாந்த பாடங்களை கற்கின்ற இணையதள வழி முறைகள், மற்றும் அதற்கான நவீன உபகரணங்கள் போன்றவைகள், நவீன விஞ்ஞான வளர்ச்சியின் வரப்பிரசாதம் என்றாலும், அதுவும் அந்த ஈஸ்வரனின் "**அபராவித்யா**" என்றால் அது மிகையாகாது.

இங்கு முழுமையாக சாஸ்திரத்தைக் கற்றறிந்த சரியான சாதகன் "**பராவித்யா**" மட்டுமே உயர்ந்தது, "**அபராவித்யா**" தாழ்ந்தது என்ற பேதமைகள் இல்லாமல், இருமைகளில் சிக்காமல் இருப்பான். அவனே ஞானி. அவனே ப்ரஹ்மம்.

மேலும், இது தற்போதைய காலத்தின் கட்டாயம் என்பதையும் அறியவும்.

ஆகவே, இங்கு மிக உயர்ந்த மெய்ஞ்ஞான இரகசியங்களை, இன்றைய காலத்திற்கு ஏற்ப, இன்றைய சாதாரண மக்களும் படித்துப் பயன் பெற வேண்டும் என்ற நல் நோக்கத்தில் மட்டுமே, நடை முறையில் உள்ள, நவீன விஞ்ஞானத்துடன் ஒப்பிட்டு விளக்கப்படுகின்றது.

எப்பொழுதும் போல, பாரம்பரிய முறையில் வேதாந்த பாடங்களையும் நடத்துவதும், சித்தர்களின் தமிழ் பாடல்களைக் கொண்ட பழைய பாடல்களை புரியாமல் குழப்பத்துடன்

அப்படியே ஏற்பதும் என்பது, இன்றைய இளைய தலைமுறை மக்களுக்குப் புரியாமல் போன காரணத்தினால்தான் இன்று **‘ஆன்மீகம்’** ஆலயங்களின் வாயிலாக வியாபாரம் ஆகிவிட்டது.

மேலும், அன்றைய காலகட்டங்களில் உள்ளது போன்று குருகுலக் கல்வி முறையில், இன்றைய இளைய தலைமுறை மாணவர்களிடம் முயற்சிப்பது என்பதும் நவீன உலகில் நடைமுறையில் சாத்தியமாகாது.

எனவே, நேரடி குருவின் மூலம் கற்பது மட்டுமே சிறப்பு என்று கருதிய பழமையான எண்ணங்களை அப்படியே பிடித்துக் கொண்டு, அத்துடன் மனம் போன போக்கில் போய்க் கொண்டிருந்தால், இந்த இணையதள கல்வியை இன்றைய சமூகம் கற்பதும் அரிது.

பெரும்பாலானவர்களின் மனம் இன்னும் அந்த பழமை யிலேயே சிக்கிக் கொண்டுள்ளது, இன்றைய நவீனத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றது. அதற்குக் காரணம் அவர்களது **‘அறியாமை’** என்றே கருத வேண்டும்.

ஆதலால், இதுப்போன்ற மெய்ஞ்ஞான பாடங்களின் இரகஷியங்களை எப்படியாவது இவர்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டும், இத்துடன் இவர்களுக்கு குருபக்தி, உண்மையான இறைபக்தி போன்றவைகளை அறிய வைக்க வேண்டும் என்ற ஆவலினால்தான் இதுப் போன்ற பாடங்கள் இணையதளத்திலன் வாயிலாகக் கொடுக்கப்படுகின்றது.

பொதுவாக, சாஸ்திரத்தைக் கற்பது என்பது, குருவும், சிஷ்யனும் நேரடியாக இருந்து கற்பதுதான் மரபு. ஆனால்,

இன்று காலத்தின் கட்டாயம், நம்மால் ஏற்படுத்தப்பட்ட மரபை நாமே உடைக்க வேண்டிய நிலை வந்துள்ளது.

யோசித்துப் பாருங்கள்!

இன்றைய சாதாரண உலகியல் கல்விக்கூட காலத்தின் கட்டாயத்தினால், நவீன **ஆன்லைன் (Online)** கல்வியாக மாற்றப்பட்டுள்ளதை கவனியுங்கள்.

இதுவும் **ஈஸ்வர சங்கல்பம்** எனலாம்.

காரணம், அனேக மனித மனங்கள் இன்று மிகவும் துஷ்டத்தனமான சீர்கேடுகளை கொண்டுள்ளது.

நவீன கல்வியில் கற்றுக் கொடுக்கப்பட்ட பாடங்களில் அதிக மதிப்பெண்களைப் பெற வேண்டும் என்ற ஆர்வம் காரணமாக மாணவர்களிடையே காணப்படுகின்ற, போட்டி, பொறாமை மனப்பான்மையே அவர்களை ஆரம்பத்தில் இருந்து அவ்வாறு பயிற்றுவிக்கப்பட்டுள்ளது.

அதன் விளைவாக அவர்கள் நடைமுறை வாழ்க்கையில் சம்பாதிக்க வரும் பொழுதும், அதே போட்டி, பொறாமை குணங்களுடன் அனைவரையும் அணுகவேண்டிய அவசியம் உண்டாகின்றது.

அத்தகைய அணுகுமுறைகளுக்கும் ஒரு மாற்றம் தேவை என்பதினால்தான், கற்கின்ற கல்வியில் கட்டாய மாற்றத்தை இயற்கையே இன்று உண்டாக்கியுள்ளது.

நன்கு நினைவில் கொள்ளுங்கள்.

ஒன்று மட்டுமே, இங்கு எல்லாமாகவும் இருக்கின்றது என்பதினால், அது எந்த ரூபத்தில் சகுணத்தில் வந்தாலும் அதை ஏற்கலாம். ஆனால், அதை ஏற்பதற்கு தடையாக இருப்பது நம்முடைய அறியாமை மனம்.

அதாவது, நவீன தொழில்நுட்பத்தில் கணினியைப் (Computers) போன்று, ஸ்தூலத்தில் இன்று நம்மிடையே அது காணப்படுகின்றது என்றே கூற வேண்டும்.

இல்லாவிட்டால், இன்றைய மக்கள் தொகையில் மனிதன் எதையுமே சமாளிக்க முடியாது திண்டாடுவான். அனைத்தும் வெறும் உடல் உழைப்பினால் மட்டுமே அடைய முடியும் என்றால், யோசித்துப் பாருங்கள் எத்தகைய நடைமுறை சிக்கல்களை நாம் சந்திக்க வேண்டியது இருக்கும்?!

## 12. குருவும், பக்தியும்!

அதே சமயம், ஆனாதி காலம் முதற்கொண்டு, இன்று வரை எதுவுமே மாற்றத்திற்கு உட்படாமல், அப்படியே இருந்தது கிடையாது. எனவே, காலத்தின் கட்டாயம், காண்கின்ற காட்சியில் எவ்வளவோ மாற்றங்கள், அவ்வாறே மனித மனங்களிலே எவ்வளவோ அசுத்தங்கள்.

அந்த வகையிலே, ஆன்மீகம் என்ற போர்வையில் மனித மனம் சாஸ்திரத்தைக் கற்றுக்கொண்டு, அனைத்து

பாடங்களையும் பயின்று விட்டேன், எனக்கு பகவத்கீதை பாடமாகத் தெரியும், பத்து உபநிஷதங்களும் அத்துப்படி, ப்ரஹ்மசூத்திரம் என் விரல் நுனியில் நிற்கின்றது என்றெல்லாம் கூறிக்கொண்டு இருக்கும்.

மேலும், படித்த விசயங்களை புத்தியில் மட்டுமே வைத்துக் கொண்டு, அனுபவத்திற்கு வராமல் ஆணவத்தில் ஆடிக் கொண்டிருக்கும்.

ஏன் சாஸ்திரத்தைக் கற்ற பின்பும், அத்தகைய கர்வம் அவர்களுக்கு உண்டாகின்றது என்றால், அவர்கள் உண்மையில் கற்கவில்லை, புத்தியில் மட்டுமே ஏற்றி வைத்துக் கொண்டு உள்ளார்கள்.

ஆதலால், தன்னை தான் அறிந்து தன்மயமாதல் என்பது அவர்களுக்கு நிகழ்வதில்லை. அவர்களது மனதை ஆவரண சக்தி என்ற **மாயை** மூடி மறைத்துள்ளதை, அறியாத மூடர்களாகவே இன்னமும் இருப்பார்கள்.

இவர்களிடம் பாடங்களை பயில்கின்ற மாணவர்களின் பரிதாப கதியும் அதோகதிதான்.

இதைத்தான் திருமூலரும் தனது திருமந்திரத்தில் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்.

**“குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்**

**குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்**

**குருடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்**

**குருடுங் குருடுங் குழிவிழு மாறே”**

இவ்வாறு, அடைந்த அறிவினால் (ஞானத்தினால்) இறைவனை அனுபவமாக உணராமல், புத்தியில் மட்டுமே ஏற்றி வைத்துக் கொண்டு, ஏகப்பட்ட இருமைகளில் சிக்கியுள்ளவர்களை குருவாக ஏற்றுக் கொண்ட சீடர்களும், அவ்வாறே அந்த குருவின் வழியில் நடப்பார்கள்.

இதுப்போன்ற சிஷ்யர்களான முமுக்ஷுக்களுக்கு, ஆதியும், அந்தமும் இல்லாத இருமைகள் அற்ற இறைவனை அனுபவமாக உணர்ந்த சத்குருவை சரணடைய முடியாமல் இருப்பதற்குக் காரணம், அவர்களது முன்வினைப் பயன் முழுவதுமாக பாவங்களால் நிறைக்கப்பட்டுள்ளதினால், அதற்கேற்ற பலனாக, அதற்கேற்ற குருவை அவர்களுக்குக் காட்டி கொடுக்கும் என்று அறியலாம்.

அந்த வகையிலேதான் இன்றைய பெரும்பாலான அஞ்ஞானிகள் பலரையும் ஞானிகளாக ஏற்றுக் கொண்டு, அவர்களை சத்குரு என்று கூறிக் கொண்டிருக்கின்றனர்.

ஏனென்றால், உண்மையை (சத்தியத்தை) உணராத இவர்களது ஊழ்வினை, உண்மையான குருவை எவ்வாறு அடையாளம் காண அனுமதிக்கும்? அவரை எவ்வாறு சத்குருவாக ஏற்றுக் கொள்ள எளிதாக முடியும்? அவரை எவ்வாறு அனுபவத்தில் பின்பற்ற முடியும்?

உண்மையான சத்குரு எப்படி இருப்பார்? அவரது இலக்ஷணங்கள் என்ன? என்பதை சாஸ்திரங்களை மற்ற பாடங்களைப் போன்று வெறும் புத்தியில் மட்டுமே ஏற்றிக் கொண்டவர்களும், சாஸ்திரத்தையே கற்றறியாத இவர்களைப் போன்றவர்கள் இத்தகைய போலி குருமார்களையே பின்

தொடர்வார்கள். இவர்களுக்கு அறியாமை இன்னமும் இருப்பதினாலேயே, போலி குருவுக்கும், உண்மை குருவுக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்பதை, உணர்ந்து கொள்ளும் திறன் அற்றவர்களாக இருப்பார்கள்.

உண்மையான குருவுக்கு என்று சில அடிப்படைத் தகுதிகள் (வரைமுறைகள்) உள்ளன. அவைகள், எவைகள் என்றும், அவைகள் யாருக்கு பொருந்துகின்றன என்றும், அவர்தான் உண்மையான சத்குரு என்றும் உணர்ந்து கொள்ள முடியாமல் போனதற்குக் காரணம், சாஸ்திரங்களைக் கற்கின்ற காலங்களில் ஜீவன் முக்தர்களைப் பற்றி நிறைய படித்துவிட்டு, அவர்களைப் போன்று, தானும் மாற வேண்டும் என் அக்கரை இல்லாமல், அது ஏதோ அவர்களுக்கு மட்டுமே சாத்தியம் என்பதுப் போன்றும் இருந்து விடுவார்கள்.

இதுதான் இவர்களுக்கு இதுப்போன்ற குறைபாடுகள் உடைய குருவைக் காட்டிக் கொடுக்கின்றது. உண்மையிலேயே கற்றுக் கொடுப்பவரும், கற்றுக் கொள்கின்றவர்களும் வேறு, வேறு அல்ல!

சத்குருவும் உங்களுக்குள்ளேயே உள்ளுணர்வாக இருந்துக் கொண்டுதான் உபதேசிக்கின்றார்.

சாஸ்திர உபதேசத்தை உள் வாங்குபவரும், அதே உள்ளுணர்வில் மூலம்தான் உள் வாங்குகின்றார்.

ஆனால், சாஸ்திரத்தைக் கற்று முடிக்கின்ற காலம் மட்டும் குரு, சிஷ்யன் என்ற இருமைகள் தேவைப்படுகின்றது. அதுவும் எதற்காக என்றால், அப்பொழுதுதான் சத்குவின் மீது

அந்த சிஷ்யன் செலுத்தும் '**பராபக்தி**' அவனை அவன் உண்மை சொரூபத்திற்கு கொண்டு சேர்க்கும்.

ஆனால், இந்த அன்பானது (பக்தி) சத்குருவிடம் மட்டும் காட்டுவது எப்படி "**பராபக்தி**" என்று அழைக்கப் படுகின்றதோ, அவ்வாறே அன்பை அனைத்து சீவர்களிடமும் காண்பிப்பது "**அநன்யபக்தி**" என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

ஆனால், இந்த அநன்ய பக்திக்கு வருவதற்கான அடிப்படை தகுதியே, சாதகன் தன்னை அறிந்த தன் '**சொரூப ஞானம்**' மட்டும்தான்.

வேதாந்த விஷயங்களை இவ்வாறு கற்று அறியாத சாதாரணமான பக்தியிலேயே இருப்பவர்கள், இந்த சொரூப ஞானம் பற்றிய புரிதல் இல்லாத காரணத்தினால், அவர்களால் இதுப்போன்ற '**அநன்யபக்தி**' செய்ய முடியாமலும், சத்குருவை அடைய முடியாத '**பராபக்தி**' செய்ய முடியாமலும், வெறும் '**விசயசுகபக்தி**' என்ற காமிய பக்தியிலேயே அனைத்தையும் செய்துக் கொண்டு இருப்பார்கள்.

அவர்களுக்கு இன்னும் சில காலங்கள் இருக்கின்றது. அது இந்த பிறவியிலோ, அடுத்து எந்தப் பிறவியிலோ சாத்தியமாகும் என்பதை யார் அறிவார் பராபரமே!

எனவே, அடைந்த தன் சொருப ஞானத்தை அனுபவம் ஆக்குவது என்பது, தன்னில் அனைத்தையும் பார்க்கின்ற, அதி உன்னத பக்தியான "**அநன்ய பக்தி**" மூலம் மட்டுமே சாத்தியம்.

இதைத்தான் பகவான் ஸ்ரீ கிருஷ்ணரும் தன் கீதையில் உபதேசிக்கின்றார். ஆனால், கற்கின்ற சாதகனோ, நான்தான் ஞானத்தை அடைந்து விட்டேனே, இனி எதற்காக பக்திக்குப் போக வேண்டும் என்ற, பேதமையின் காரணமாக அறியாமை கொண்டு, அனுபவத்திற்கு வரமுடியாமல், ஆணவத்திலேயே ஆடிக்கொண்டு இருக்கின்றான்.

## 13. சத்ய சங்கல்பம்

ஒருவர் அடைய நினைக்கும் அத்தனை விசயங்களும் **மாயை** என்ற பொய்யான மறைப்பால் மறைக்கப்பட்டு, உண்மையாக இருப்பது போன்று அவர்களுக்குத் தோன்று கின்றது.

அந்தப் பொய் திரையை நீக்கினால் **சத்ய சங்கல்பம்** வந்து விடும்.

நம்முடைய உண்மையான உடலுக்கு (வெட்டவெளி) வெளியே உள்ள பொருட்களின் மீது உண்டாகின்ற ஆசை, அதை அடைவதில் தீவிர முயற்சி போன்றவைகள் எல்லாம் அறியாமையின் காரணமாக உண்டாகின்றது.

இவைகள் எனக்கு வேறாக இல்லை என்ற அறிவு உண்டாகி விட்டால் போதும், அவர்களது ஆசைகள் எல்லாம் மறைந்து விடும்.

சிறிய ஆசைகளை பெரியதாக்கி, அவைகளை அடைவதில் முயற்சி காட்டுவதும், அல்பமான விஷயங்களின் பின்னே இழுக்கப்பட்டு, அவைகளை நோக்கி ஓடிக் கொண்டு இருப்பதும், இத்துடன் அவர்களுக்கு உள்ளே உள்ள உயர்ந்த விஷயத்தை அறிய நாட்டமின்றி இருப்பதும், போன்ற இவைகள் எல்லாமே அவர்களுடைய அறியாமையினால் மட்டுமே உண்டாகின்றது.

இந்த அறியாமையை நீக்கவே, சாஸ்திரம் அனைத்து உபதேசங்களையும் கொடுக்கின்றது. அதாவது, ஏற்கனவே ஏற்றி வைத்துக் கொண்டுள்ள பல்வேறு எண்ணங்களை நாம் நம்மிலிருந்து வேறாகக் கருதாமல், அவைகள் நம்மால் பிரதிபிம்பிக்கப்பட்ட மனதினால் வெளிப்படுகின்றது என்பதை அறிந்து, அவைகளை அனுபவமாக்க முயற்சிக்காமல், வெறும் சாக்ஷி மாத்திரமாக வேடிக்கை மட்டும் பார்த்துக் கொண்டு, அனைத்தையும் அணுகுவது என்பதே '**நிர்விகல்ப சமாதி**' எனப்படும்.

அதாவது, நம் முன்னே அனைத்து எண்ணங்களும் காட்சியாகும், இந்த உடலுக்கு அனுபவமும் ஆகும். ஆனால், நான் இந்த ஸ்தூல உடல் அல்ல! என்ற அறிவில் அனைத்தும் நடைப் பெறுவதால், அதனால் சற்றும் பாதிக்கப்படாத தன் சொரூபத்தில், சகஜமாக இருப்பதே '**சகஜ சமாதி**' என்றும் கூறப்படும்.

இது ஒன்றே அனைத்தையும் சகஜமாகப் பார்க்கின்ற **என்னுள் நீ!, உன்னுள் நான்!** என்ற இரண்டற்ற **"அன்பு"** நிலையில் **"இருப்பு"** கொள்வதாகும்.

இதுவே அன்பு, இதுவே **பக்தி!,** இதைக் கற்றுக் கொடுப்பதே **கர்மம்!,** இதை அனுபவப்படுவதே **யோகம்!,** இதை அறிந்துக் கொள்வதே **ஞானம்!.**

## 14. எட்டும், இரண்டும்

**"ஓம்"** எனும் ஒலி சூரியனின் வளி மண்டலத்தின் வெளிப் புறத்தில் இருந்து வெளிவருகிறது என்று நாசாவின் ஆய்வில் அண்மையில் தெரியவந்துள்ளது.

இதனை அடுத்து **"ஓம்"** எனும் பிரணவ மந்திரத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் அமெரிக்க அறிஞர்கள் ஈடுபட்டுள்ளனர் என அண்மையில் வெளியான ஒரு பத்திரிகை செய்தி தெரிவிக்கிறது.

ஆனால், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே (குறிப்பாக 3 ஆம் நூற்றாண்டு) இந்த உண்மையை அதாவது, கடவுள் தத்துவத்தை நம் மெய்ஞ்ஞானிகள் மிக எளிமையாக நமக்கு எடுத்துரைத்துள்ளனர்.

ஆனால், அவைகள் நமக்குப் புரியாமல் போனதற்குக் காரணம் நம்மிடையே சித்த சுத்தி என்ற மனத் தூய்மை இல்லாத காரணத்தினால்தான், மெய்ஞ்ஞானத்தில் கூறினாலும், விஞ்ஞானத்தில் கூறினாலும் உள்வாங்க முடிவதில்லை.

இறைவன் அம்மையப்பராக - மாதொருபாகனாக - நாத விந்து வடிவாக, ஒளி, ஒலியாக இருப்பதைக் கண்டு களித்து, வழிபட்டுக் கூறியவர் மணிவாசகப் பெருமான் ஒருவரேயாவார்.

அவரே, "**என்னை ஓர் வார்த்தையுட்படுத்துப்பற்றினாய்**" (செத்.பத்) என்றும், "**உய்யும் நெறி**" காட்டுவித்திட்டு ஓங்காரத்து உட்பொருளை ஐயன் எனக்கருளியவாறு" (அச்சோ பதிகம்) என்றும் கூறியுள்ளார்.

அந்த ஒரு வார்த்தையாவது "**ஓம்**" எனும் பிரணவமாகும்.

"**உய்யும்நெறி**'யாவது ஓங்காரமேயாகும்.

எனவே, இறைவனின் வரிவடிவம் ஓங்காரம். ஒலி வடிவம் நாதம் என்பதை உணர வேண்டும்.

மெய்ஞ்ஞானி மணிவாசகப் பெருந்தகை கண்டு காட்டியதையே, தற்போது ஆராய்ச்சி என்ற பெயரில் விஞ்ஞானிகள் செய்து வருகின்றனர்.

அம்மையப்பனாக இருக்கும் இறைவன், அன்புக்கு (அநன்ய பக்திக்கு) மட்டுமே கட்டுப்பட்டவன் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவன்.

**“எட்டும் இரண்டும் அறியாத என்னை**
**எட்டும் இரண்டும் அறிவித்தனன் என்நந்தி**
**எட்டும் இரண்டும் அறிவால் அறிந்தபின்**
**எட்டும் இரண்டும் இலிங்கம தாமே”** - **திருமந்திரம்.**

**<u>பொருள்:</u>**

எட்டுமிரண்டும் அறியாமல் இருந்தேன், அதை எனக்கு அறிவித்தான் என் குரு நந்தி, அதை அறிந்த பின், அது லிங்கமாகிய **பத்தாகிய ஆன்மா** என்று அறிந்து கொண்டேன்.



அ, உ, ம என்ற மூன்றும் சேர்ந்து “ஓம்” எனப்படுகின்றது.

உருவமற்ற ப்ரணவ மந்திரமான “**ஓம்**” என்ற ஓசையின் உருவ (சகுண) நிலையே ‘**லிங்கம்**’ என்கிறார் திருமூலர்.

“**ஓம்**” என்ற ப்ரணவ மந்திரம் அ-உ-ம என்ற மூன்று ஓசைகளால் ஆனது.

‘**அ**’ என்பது லிங்க பீடத்தையும், ‘**உ**’ என்பது ஆவுடையாரையும், ‘**ம**’ என்பது லிங்கத்தையும் குறிக்கிறது.

லிங்கம் மும்மூர்த்திகள் என்ற பிரம்மா, விஷ்ணு மற்றும் மஹேஷ்வரனின் ரூபம் என விளக்குகிறார். இவர்களை ஈஸ்வரன் என்று சாஸ்திரத்தில் கற்றுள்ளோம்.

இவ்விளக்கம் கொண்ட திருமந்திரத்தை பார்ப்போமா?

“**இலிங்கநற் பீடம் இசையும் ஓங்காரம்**
**இலிங்கநற் கண்டம் நிறையும் மகாரம்**
**இலிங்கத்து உள் வட்டம் நிறையும் உகாரம்**
**இலிங்கம் அகாரம் நிறைவிந்து நாதமே.**” - திருமந்திரம் 1752.

ஆக, லிங்கம் என்பது என்ன என்று தற்பொழுது தெரிந்துக் கொண்டீர்களா? அதுவே “**ஓம்**” என்ற ஓசையின் ஸ்தூல உடல் ஆகும்.

அடுத்த விஷயத்திற்கு வருவோம்.

இறைவன் லிங்க உருவத்தில் மட்டும் இல்லாமல், ஏன்? நடராஜர் உருவத்தில் வழிபடுகின்றோம்?

அதாவது சகுண ப்ரஹ்மத்தை இவ்வாறு பலவாறாக நம் முன்னோர்கள் ஏன் சுட்டிக் காட்டுகின்றார்கள் என்பதையும் அறிவோம்.

அதன் விளக்கத்தையும் பார்த்துவிட்டால், நமக்கு சகுணத்தில் இருந்து நிர்குணத்திற்கு வருவது எளிதாக இருக்கும்.

இறைவனின் திருநடனக் காட்சியே திருக்கூத்து தரிசனம் என்றும் '**அனுக்கிரஹ தரிசனம்**' என்றும் அழைக்கப்படுகின்றது.

**''சிவஞானச் செல்வர்களின் (ஞானிகளின்) அகத்தே நிகழும் இத் திருக்கூத்து தரிசனத்தை உலகோர் (அஞ்ஞானிகள்) புறத்தே கண்டு உயர்வு பெறும் நிலையில் நிகழ்த்தப் பெறுவதே நடராஜர் தரிசன விழாவாகும்.''**

இந்த நடராஜப் பெருமானின் திரு நடனக் காட்சியை அறிந்த நம் மெய்ஞ்ஞானி அருட் செல்வர் அருணகிரிநாதர் அவர்கள், '**கட்டி முண்டக அரபாலி அங்கிதனை**' எனத் துவங்கும் சிதம்பரத் திருப்புகழ் பாடலில் '**எட்டு - இரண்டு**' எனும் இரண்டு எண்களை வைத்து ஒரு சொல்லோவியமே புனைந்து விட்டார்.

**எட்டி ரண்டு அறியாத என்செவியில்**

**எட்டி ரண்டும் இதுவாம் லிங்கமென**

**எட்டி ரண்டும் வெளியாம் என மொழிந்த குரு ..... முருகோனே!**

**எட்டி ரண்டு திசை யோட செங்குருதி**

**எட்டி ரண்டு முருவாகி வஞ்சகர் மெ**

**எட்டி ரண்டு திசை யோர்கள் பொன்ற அயில் ...... விடுவோனே!**

இந்த உலகியலில் உள்ள கணிதத்தில் கூட அறிவு முதிர்ச்சி பெறாத என்னை, அதாவது எட்டும், இரண்டும் சேர்த்தால் பத்து என்று கூட அறியாத என் செவியில், '**அகர**' '**உகர**' '**மகர**' சேர்க்கையின் பரிணாமமே பஞ்சாட்சரமாகிய சிவச் சின்னம் என்று உபதேசித்து, <u>பத்து லட்சணங்கள் கொண்ட பக்தி மார்க்கத்தை</u> எனக்கு உபதேசித்த குருநாதனே! முருகோனே! என்று உள்ளம் உருக அநன்ய பக்தியில் தன்னை அவனுள் கண்டு பாடுகின்றார்.

**கணிதத்தின் கண்கள்!**
**தமிழ் எண்கள்!**

| | | |
|---|---|---|
| க | க | 1 |
| உ | உ | 2 |
| ௩ | ௩ | 3 |
| ச | ச | 4 |
| ரு | ரு | 5 |
| சா | சா | 6 |
| எ | எ | 7 |
| அ | அ | 8 |
| கூ | கூ | 9 |
| ௰ | ௰ | 10 |

(தமிழ் மொழிக் கணிதத்தில் எட்டு மற்றும் இரண்டு சேர்ந்து பத்து வருவதை, தமிழ் எழுத்துடன் சுட்டிக்காட்டி இங்கு விளக்கப்படுகின்றது).

**எட்டு = அ** என்றும், **இரண்டு = உ** என்றும் குறிக்கப்படுகிறது.

இத்துடன் **'ம'** என்ற மகரம் சேரும் போது, **"ஓம்"** என்ற பிரணவம் பிறக்கிறது. அதுவே சிவச் சின்னம் (இலிங்கம்) ஆகும் என்று ஏற்கனவே இங்கு கூறப்பட்டது.

அந்த 'ஓம்' என்பதே வெட்டவெளி.

எப்படி?

அ = 8
உ = 2, இதைக் கூட்டினால் வரும் எழுத்து, **ய.**
ய = 10.

ஆக, **'ய'** என்பது ஆகாயம்.

| | | |
|---|---|---|
| **'ந'** | - | **நிலம்** |
| **'ம'** | - | **நீர்** |
| **'சி'** | - | **நெருப்பு** |
| **'வ'** | - | **காற்று** |
| **'ய'** | - | **ஆகாயம்.** |

அவ்வாறே, ‘**நமசிவய**’ என்பதிலும் ‘**ய**’ ஆகாயம் என்பதை அறியவும்.

அத்தகைய ஓங்காரமே வெட்டவெளி என்று அறிந்தாலும், அது அனுபவமாக வேண்டுமல்லவா?

அதற்குத்தான் இந்தப் பாடம்.

அந்த ஓங்காரம், லிங்கம், நடராஜர் என்ற இந்த உருவமுடைய சகுண ப்ரஹ்மம் எப்படி உருவமற்ற நிர்குணத்தில் அறிய முடியும் என்பதைக் காணலாம்.

**"அணுவும் அவனும் அவனுள் அணுவும்**
**கணுஅற நின்ற கலந்து உணரார்**
**இணையிலி ஈசன் அவனெங்கும் ஆகித்**
**தணிவற நின்றான் சராசரம் தானே"**

மெய்ஞ்ஞானத்தில் உள்ள **அகாரம், உகாரம், மகாரம்** என்ற பிரணவ அட்க்ஷரங்களே விஞ்ஞானத்தில் உள்ள **அணு** அல்லது பரமாணுத்துகள் எனலாம்.

அணுக்களுக்குள் உள்ள **புரோட்டான், எலக்ட்ரான், நியூட்ரான்** என்ற மூன்றும் **அ, உ, ம** என்ற தத்துவங்களாகி ‘**ஓம்**’ என்கின்ற பிரணவமாகிறது.

**அகரம்** என்பது இறைவனாகவும், **உகரம்** உயிர்ச் சக்தியாகவும், **மகரம்** இரண்டும் ஒன்று சேரும் மாயா சக்தியாகவும் தத்துவத்தில் குறிக்கப்படுகின்றது.

இந்த மூன்றின் தத்துவமே "**தத்துவமஸி**" **(தத் - துவம் - அஸி)** என்ற மகா வாக்கியத்தின் விளக்கம் ஆகும்.

அதாவது, '**நீ அதுவாகவே இருக்கின்றாய்**' என்பதில் கூறப்பட்டுள்ள அதி இரகஷிய விளக்கம் ஆகும்.

அது எப்படி என்றால், "**தத்**" என்பது சீவனுக்குள் அடங்கியிருக்கின்ற '**வெளி**' ஆகும். அடுத்து, "**துவம்**" என்பது '**ஆணவம், கன்மம், மாயை**' என்ற மூன்று மலங்களும் நீங்கப் பெற்ற ஆன்மாவாகும்.

இதிலே "**அஸி**" என்பது, அந்த வெளியும், ஆன்மாவும் இரண்டறக் கலக்கும் இடமாகும். அதாவதி ஜீவனும், ப்ரஹ்மமும் ஐக்கியம் நடக்கும் குறிச்சொல்லாக இந்த '**அஸி**' என்ற பதம் குறிக்கப்படுகின்றது.

இங்கு புரிந்துக் கொள்ள வேண்டியது, உடலுக்கு உள்ளே உள்ள வெளி என்ற '**சிதாகாசத்தை**' சாஸ்திரம் "**ஆன்மா**" (ஜீவன்) என்று மட்டுமே அழைக்கும்.

அதுவே, உடலுக்கு வெளியே உள்ள ஆகாசத்தை சாஸ்திரம் "**ஈஸ்வரன்**" என்று மட்டுமே அழைக்கும்.

இந்த இரண்டுக்கும் உள்ளும், வெளியும் உள்ள மொத்தப் பிரபஞ்சத்தையே தன்னுள் மிதக்க வைத்துக் கொண்டுள்ள வெளியைத்தான் "**வெட்டவெளி**" என்றும் "**ப்ரஹ்மம்**" என்றும் அறிகிறோம்.

இப்பொழுது, புரியும் ஆன்மாவுக்கும் (ஜீவன்), ஈஸ்வரனுக்கும் (சக்தி), ப்ரஹ்மத்திற்கும் (வெட்டவெளி) உள்ள வித்தியாசம்.

மகா வாக்கியத்தின் இந்த மூன்று பதங்களுமே, நவீன விஞ்ஞானத்தின் "**அணு**" (Atom) என்று கூறப்படுகின்ற பொருளைப் பற்றி மெய்ஞானிகள் தன்னுள் அறிந்து, அதை அன்றே விளக்கியுள்ளனர்.

இதிலே, அந்த பரமாணுவின் மூன்று செயல்களைக் குறிக்கின்ற, இயக்கத்தை வைத்துத்தான் இந்த மொத்தப் பிரபஞ்சமே இயங்கிக் கொண்டிருக்கின்றது என்ற தத்துவம் ஆகும்.

அதாவது, நவீன அறிவியல் கூறுகின்ற அணுவைப் பற்றிய விளக்கத்தில், ஒரு தனிமத்தின் இரசாயன குணங்கள் மாற வேண்டுமானால், அதன் அணுக்களில் உள்ள புரோட்டான், எலக்ட்ரான், நியூட்ரான்-களின் எண்ணிக்கைகள் மாற வேண்டும்.

அதன்படி, ஒரு தனிமம் மற்றொரு வேறுபட்ட தனிமமாக மாறுகின்றது. சித்தர்கள் இந்தத் தத்துவத்தைப் பயன்படுத்தியே இந்த வெட்டவெளியில் புறத்திலும், மனித உடலில் அகத்திலும் "**இரசவாதம்**" என்ற முறையைக் கண்டறிந்தனர்.

இந்தத் தத்துவப்படியே உயிரணு எனப்படும் செல்களில் மாற்றங்களைச் செய்து சாகாக் கலையைக் கண்டறிந்தனர்.

இதையே திருமூலர் தன் பாடலில் விளக்குகிறார்.

**“அணுவில் அணுவினை, ஆதிப் பிரானை**
**அணுவில் அணுவினை ஆயிரம் கூறு இட்டு**
**அணுவில் அணுவை அணுக வல்லார்கட்கு**
**அணுவில் அணுவை அணுகலும் ஆமே.”** - திருமந்திரம்.

**<u>பாடலின் விளக்கம்</u>:**

அணுவுக்கும் அணுவாய் உள்ளதை ஆயிரம் கூறிட்டு, அந்த ஆயிரத்தில் ஒரு கூற்றை நெருங்க வல்லவர்க்கும், அணுவுக்கு அணுவானவனும், ஆதியும் ஆனவனும், அதிச் சூட்சுமம் ஆனவனும் ஆகிய, அந்த பரம்பொருளை அடையவும் கூடும் என்று கூறுகின்றார்.

அடுத்த பாடலில் இதையே இன்னும் சற்று எளிமையாக விளக்குகின்றார்.

**“கரந்துங் கரந்திலன் கண்ணுக்குங் தோன்றான்**
**பரந்த சடையான் பசும்பொன் நிறத்தான்**
**அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்**
**விரைந்து தொழப்படும் வெண்மதி யானே.”** - திருமந்திரம்.

இறைவனை, அனைத்திலும் கலந்தும் கலக்காமலும் இருப்பவனே, கண்ணுக்குத் தெரியாமல் இருப்பவனே, பரந்த சடையுடையவனே, பசும் பொன் நிறத்தில் இருப்பவனே, தவம்

இல்லாதவர்களால் அணுக முடியாமல் இருப்பவனே, ஆனால், விரைவாகத் தெரிந்துக் கொண்டு தொழக்கூடிய வெண்ணிறம் கொண்ட முழுமையான நிலவானவனே என்று மிக, மிக சூக்ஷூமமாக அந்த இறைவனை (ப்ரஹ்மத்தை) பற்றி இங்கு குறிப்பிடுகின்றார்.

அதன்பிறகு, அப்படிப்பட்ட அந்த பரப்பிரஹ்மத்தை எளிதாக அறிவது என்பது, இப்படித்தான் சாத்தியம் என்று இந்த பாடலில் கூறுகின்றார்.

“**மேவிய சீவன் வடிவது சொல்லிடில்**
**கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு**
**மேவிய கூறது ஆயிரம் ஆயினால்**
**ஆவியின் கூறுநா றாரயிரத்து ஒன்றே.**” - திருமந்திரம்.

சீவனுடைய (ஆன்மாவின்) வடிவைச் சொல்ல வேண்டும் என்றால், ஒரு பசுவின் முடியை எடுத்து அதை நூறாகக் கூறிட்டு, பின்பு அதில் ஒன்றை எடுத்து, ஆயிரமாக மீண்டும் கூறிட்டுப் பிரித்து, பின் அதில் ஒன்றை எடுத்து, அதனை நான்காயிரமாக கூறிட்டுப் பிரித்தால், அதில் ஒரு துகளை சீவனின் வடிவம் என்று கூறுகின்றார் திருமூலர்.

அதாவது, அவர் கூறுவதுப் போன்று பிரித்துக் கொண்டே போனால், என்ன மிஞ்சும், உண்மையைக் கூற வேண்டுமானால், ஒன்றுமே கண்ணிற்குத்தெரியாது எனலாம்.

அதைத்தான் "**அணு**" (Atom) என்கின்றார். இந்த ஓர் அணு என்பது புரோட்டோன், நியூட்ரோன் மற்றும் எலெக்ட்ரோன்களால் ஆனவை.

புரோட்டோனும், நியூட்ரோனும் ஒன்றோடு ஒன்றாய் பிணைந்து இருப்பதை "**நியூக்லியஸ்**" என்கின்றனர்.

இந்த நியூக்லியஸை சுற்றி வரும் எலெக்ட்ரோன் சுழன்று ஒரு சுற்றுப்பாதையை உருவாக்குகிறது.

இதுவே அணு நகர்வு. இதைத்தான் பிரபஞ்ச இயக்கம் என்கின்றோம். இந்த அணு நகர்வதைத்தான் '**நடராஜரின் நடனம்**' என்று நம் சான்றோர்கள் கூறினர்.

உலகில் உள்ள எல்லா அணுக்களும், சிவனின் லிங்க வடிவத்தில் மட்டுமே உள்ளது. அதாவது அணு என்பதுதான் உலகின் தொடக்கம், அதனால் உலகை அழிக்கவும் முடியும். ஒவ்வொரு அணுவிற்குள்ளும் உள்ள பரமாணு (Sub atomic particle) (ப்ரோட்டான் =>குவார்க் =>க்ளுவான்), ஒரே இடத்தில் இல்லாமல் நகர்ந்துக் கொண்டே இருக்கும் தன்மையுடையது.

இந்த செயலின் மூலம் ஆக்கல், அழித்தல் என்ற இரண்டு செயல்பாடுகளுமே நடைபெறுகின்றது. இது இயற்பியல் விதி.

இந்த உலகம் என்பதே தடை ஏதுமில்லாத நகர்ந்து கொண்டிருக்கும் அணுக்களால் ஆனதே. தில்லை நடராஜரின் இந்த **"ஆனந்த தாண்டவம்"** என்ற நிலையை, உலகின் பல இயற்பியல் அறிஞர்கள் **"COSMIC DANCE"** என்கின்றனர்.

அறியாமையை காலில் மிதித்துக்கொண்டு, ஆனந்தத் தாண்டவமாடும் நடராஜர் நான்கு கைகளுடன் ஆடிக் கொண்டிருப்பதை, அணுவின் இயக்கத்துடன் ஒப்பிடுகின்றனர்.

அதாவது அணுவின் கட்டமைப்பான (Sub atomic particle) எப்படி ஒரே இடத்தில் இல்லாமல் நகர்ந்துக் கொண்டே உள்ளதோ, அதேப் போன்று **"ஆடல் கடவுள்"** என்று அழைக்கப்படும் நடராஜர் ஒரே இடத்தில் இல்லாமல் ஆடிக் கொண்டே இருக்கிறார்.

இந்த நடனத்தில் ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற அணுவின் இயற்பியல் விதியின் அனைத்து செயல்களோடும் ஒத்துப்போகின்றது என்பதைத்தான் சாஸ்திரம் ஈஸ்வரனின் செயலாக **ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன்** என்று சகுண ப்ரஹ்மத்தை விளக்குகின்றது.

நம் சித்தர்கள் பிரபஞ்சப் படைப்பைப் பிரிக்க முடியாத, எப்பொழுதுமே இயங்கிக் கொண்டிருக்கும் ஒரு இயக்கம் என்றுதான் கூறுகின்றார்கள். அதனை அவர்கள் நடராஜரின் நடனம் என்ற தத்துவத்தின் வாயிலாக விளக்குகின்றனர். அது சாதாரண மக்களான மூட பக்தர்களுக்குப் புரியப்போவதில்லை.

அதுவே, தன்னை அறிந்த தத்துவ ஞானிகள் தன் உள் உணர்ந்து கொண்டார்கள். அதை அவர்கள் மக்களுக்கு பாடல்களாகவும் தெரிவித்தார்கள். இதைத்தான் மேற்கண்ட திருமூலரின் பாடல் வரிகள் நமக்கு உணர்த்த வருகின்ற விஷயம்.

அந்த மெய்ஞ்ஞானிகள் தன்னுள் உணர்ந்த மெய்ப் பொருள் இரகசியத்தை, தற்பொழுதுள்ள நவீன விஞ்ஞான த்துடன் ஒப்பிட்டு இங்கு விளக்கப்படுகின்றது.

பிறப்பும், இறப்பும் நிற்பதே இல்லை. அதுபோல், பிரபஞ்சம் என்கிற தத்துவத்தின் அடிப்படையில் அணுக்களின் நடனம், அணுக்களின் பிறப்பினாலும், இறப்பினாலும் நிற்காமல் தொடர்கிறது.

கோடானுகோடி அணுக்கள் வினாடிக்கு வினாடி உருவாகி, மறைவதுதான் பிரபஞ்சத்தின் நடனம் (cosmic dance). அதுதான் நடராஜரின் நடனம்.

இத்தகைய கோடானுகோடி அணுக்களை ஆட்டிப் படைக்கும் அவற்றுக்கு ஆதாரமாக இருக்கும் ஒரு அணுவைத்தான் '**பரமாணு**' என்கின்றது விஞ்ஞானம்.

நாம் அதைத்தான் '**வெட்டவெளி**' அல்லது '**ப்ரஹ்மம்**' என்கின்றோம்.

அதாவது, நாம் நினைத்துக் கொண்டிருப்பதுப் போன்று இந்த வெட்டவெளி ஏதோ கண்ணிற்குத் தெரியாத பூதம் போன்று, காற்றுப் போன்று, அல்லது புகைப்போன்று என்று

எப்படி எப்படி எல்லாமோ மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களினால் கற்பித்துக் கொண்டுள்ளோம்.

ஒரு உண்மை என்னதெரியுமா?

கண்ணிற்குத் தெரியாமல் ஒன்று இருக்குமானால், அது சூக்ஷுமம் என்பதை ஏன் மறந்து விடுகின்றோம். இங்குதான் மாயை நம் அறிவை மறைக்கின்றது.

அந்த மறைப்பை நீக்கி, அதை சுட்டிக் காட்டவே சத்குரு தேவைப்படுகின்றது.

அதாவது, நாம் நினைத்துக் கொண்டிருப்பதுப் போன்று கற்பனையில் இந்த '**வெளி**' நிச்சயமாக கிடையாது. அது, நவீன விஞ்ஞானம் கூறுவதுப் போன்று '**பரமாணு**' என்பதை அறிந்துக் கொள்ளுங்கள்.

அந்த அணுவுக்குள் அணுவாய் இந்த பிரபஞ்சம் இருக்கின்றது என்றால், நீங்கள் எப்படி இருப்பீர்கள் என்பதை சற்று கற்பனை செய்துப் பாருங்கள்.

நாம் என்று கூறிய உடனே, நம் மனம் எதைக் கற்பித்துக் கொள்கின்றது தெரியுமா?

இந்த பூத உடலைத்தான் அல்லவா?

இதிலிருந்தே நமக்கு இன்னும் இந்த உடல் அபிமானம் விடவில்லை என்பது இப்பொழுது புரிகின்றதா?

இதில் எதன் அடைப்படையில் நம்மை ப்ரஹ்மம் என்று கூறுகின்றோம். யோசித்துப் பாருங்கள்! மாறுங்கள்.

பொதுவாக நம்மை நாம், சீவன் என்று வைத்துக் கொண்டாலும் சரி, ஈஸ்வரன் என்று வைத்துக் கொண்டாலும் சரி, அல்லது ப்ரஹ்மம், வெட்டவெளி என்று வைத்துக் கொண்டாலும் சரி, இங்கு கூறவருகின்ற நம் உண்மை சொரூபம் நம் கண்களுக்குத் தெரியாத '**அணு**' மட்டுமே.

இப்பொழுது, புரிந்துக் கொள்ளுங்கள்!

மீண்டும், திருமூலர் பாடல்களில் அவர் நம் உண்மை சொரூபத்தை எப்படி விளக்குகிறார் என்பதைக் கவனியுங்கள்.

"**மேவிய சீவன் வடிவது சொல்லிடில்**
**கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு**
**மேவிய கூறது ஆயிரம் ஆயினால்**
**ஆவியின் கூறுநா றாரயிரத்து ஒன்றே.**" - திருமந்திரம்.

நம்முடைய உண்மை சொரூபத்தை நமக்குக் காட்டிக் கொடுக்கவே '**மெய்ஞ்ஞானம்**' என்ன கூறியதோ, அதையே நவீன '**விஞ்ஞானம்**' எப்படிக் கையாள்கின்றதோ, அத்துடன் இரண்டையும் ஒப்பிட்டு இங்கு விளக்கப்படுகின்றது.

ஆனால், சாதகனாகவே சத்குரு இன்றி, தனிப்பட்ட முறையில் படித்து இந்த மெய்ஞ்ஞானப் பாடல்களை புரிந்துக் கொள்ள முடியாததற்குக் காரணம், அவனிடம் குரு பக்தியாகிய "**பராபக்தி**" இல்லையானதினால், அவர்களாகவே எவ்வளவுதான் படித்துப் புரிந்துக் கொள்ள முயற்சித்தாலும், அவர்கள் மனம் அதை அவ்வளவு எளிதில் ஏற்காது.

நாம் காண்கிற இந்த உலகம் பலவிதமாக இருந்தாலும், ஒன்றேதான் இத்தனையும் ஆகி இருக்கிறது என்பதை, நவீன விஞ்ஞானம் தெளிவாக ஒப்புக் கொண்டு நிலைநாட்டுகிறது.

50 வருஷங்களுக்கு முன்பு, இந்த உலக வஸ்துக்கள் எல்லாம் 72 மூலப் பொருள்களுக்குள் அடங்குவதாகக் கூறிய அறிவியல், இந்த (ஜட) மூலப் பொருள்கள் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டவை (அதாவது ஒன்றுடன் ஒன்று சேராதது) என்பதே அன்றைய கருத்து.

ஆனால், இப்போது அணு (Atom) பற்றிய அறிவு விருத்தியான பின், இந்த மூலப் பொருட்கள் எல்லாமும் கூட வேறான பொருள்கள் அல்ல என்றும், ஒரே சக்தி (Energy)தான் இவை எல்லாமாகவும் ஆகியுள்ளது என்றும் தற்போதைய நவீன விஞ்ஞானம் ஏற்றுக் கொள்கின்றது.

அதாவது, பொருள் (Matter), சக்தி (Energy) இவைகள் இரண்டும் வேறு, வேறானவை அல்ல என்று விஞ்ஞானம் கூறுகின்றது.

அதைத்தான் நாமும், ப்ரஹ்மத்திற்கு (Matter) வேறானது இல்லை, இந்த ஈஸ்வரன் (Energy என்கிறோம்.

"ஐன்ஸ்டீன், சர் ஜேம்ஸ் ஜீன்ஸ் போன்ற பிரபல அறிவியல் நிபுணர்கள், அத்வைத சித்தாந்தத்திற்கு மிகவும் நெருங்கி வந்து விட்டார்கள்.

பிரம்மம்தான் பரமார்த்திக சத்தியம். உலகம் விவகார (நடைமுறை) சத்தியம் என்று அத்வைதம் சொல்வதைத்தான், இவர்கள் (விஞ்ஞானிகள்) **'உலக இயக்கமெல்லாம் இன்னொன்றைச் சார்ந்தவை** (relative) **தான், முழு உண்மை** (absolute) **அல்ல'** என்கிறார்கள்".

இப்படி உலகம் **'ஏதோ ஒன்றைச் சார்ந்தது'** என்கிற விஞ்ஞான தத்துவம்தான் ஐன்ஸ்டீனின் Relativity Theory! எனலாம்.

ஆனால், செயல் விளைவுகளை வைத்துக் கொண்டுப் பார்த்தோமேயானால், விஞ்ஞானத்துக்கும் அத்வைதத்துக்கும் ஒரு வித்தியாசம் உண்டு.

அது என்ன?

அதாவது, சக்தியும் பொருளும் ஒன்று என்கின்ற மிகப் பெரிய உண்மையைக் கண்ட அணு விஞ்ஞானிகள், அதே

அறிவைக் கொண்டேதான் ஸ்தூலத்தில் அனைத்தையும் கண்டு பிடிக்கின்றார்கள்.

அவர்கள் கண்டறிந்த அனைத்துப் பொருட்களுமே அணுக்களால் ஆனவைகள்.

அந்த அணு என்பதை கண்ணால் காண முடியாது, தொட்டு உணர முடியாது, நுகரவும் முடியாது.

அப்படிப் பார்க்க முடியாத, உணர முடியாத, நுகர முடியாத அணுக்களால்தான், நம்முடைய உடல், நாம் உண்ணும் உணவு, உடுக்கும் உடை, குடிக்கும் நீர், நம்மைத் தாங்கும் நிலம், நாம் பார்க்கும் மரம், செடி, கொடி மற்றும் ஜடப் பொருள்கள் எல்லாமாக உருவாகியிருக்கிறது என்றால் நம்புவீர்களா? ஆனால், அதுதான் அணு.

## 15. சாகாக் கல்வி

விஞ்ஞானமும், நம்முடைய மெய்ஞானமும் கூறும் உண்மை ஒன்றே. அதுவே அணு.

அந்த அனைத்து அணுக்களுக்குள்ளும் உப அணுக்கள் மறைந்திருக்கின்றன. அந்த அணுக்களை நிர்வகிக்கும் ‘கடவுள் அணு’ என்ற ஒன்று இருக்கிறது என்றால், எந்த அளவுக்கு சூட்சுமமானது அந்த அணு!

அந்த அணுவை அனைத்திலும் கண்டு, அது தன்னிலிருந்து வேறில்லை என்ற ஞானத்தினால், அதை எங்கிருந்தாலும், எந்த சகுண ரூபத்திற்கு வந்திருந்தாலும், அதுவே நான், நானே அது என்ற அநன்ய பக்தியினால் மட்டுமே அது சாத்தியமாகும்.

இதுவே சாகாக்கல்வியை கற்கும் முறையாகும். இதுவே சிற்றம்பலக் கல்வியாகும்.

**கற்றேன் சிற்றம் பலக் கல்வியைக் கற்று கருணை நெறி**
**உற்றேன் எக்காலமும் சாகாமல் ஓங்கும் ஒளி வடிவம்**
**பெற்றேன் உயர் நிலை பெற்றேன் உலகில் பிறர நிலையைப்**
**பற்றேன் சிவானந்தப் பற்றே என் பற்று என பற்றினனே!**

என்கின்றார் வள்ளல் பெருமான்.

மேலும், அவரே கூறுகின்ற, வெட்டவெளியில் கலந்த மாணிக்கவாசகப் பெருமானைப் பற்றிய பாடல் வரிகள்...

**"வான்கலந்த மாணிக்கவாசக! நின் வாசகத்தை,**
**நான்கலந்து பாடுங்கால், நற்கருப்பஞ்சற்றினிலே**
**தேன்கலந்து, பால்கலந்து, செழுங்கனித் தீஞ்சுவை கலந்து, என்**
**ஊன்கலந்து, உயிர்கலந்து, உவட்டாமல் இனிப்பதுவே!"**

இவ்வாறு மஹான்கள் ஞானத்தை அடைந்து, அதை உபதேசித்த சத்குருவின் அனுக்ரஹத்தால், அநன்ய பக்தியை மேற்கொண்டு அனைத்தையும் தனக்கு வேறாகப் பார்க்காமல், தன்னில் தானாய் ஒளிகின்ற அந்த ஓங்காரத்தை, அறி

வொளியை, வெட்டவெளியை, பரமாணுவை தங்கள் அனுபவத்திலேயே உள்ளுணர்வாய்க் கண்டறிந்து, பிறவாப் பெரு நிலையை பெற்றுள்ளனர்.

## 16. விஞ்ஞானியும், மெய்ஞ்ஞானியும்

விஞ்ஞான அறிவு கடவுள் உணர்ச்சியை மாய்த்துவிடும் என்று நம்மில் பலரும் கற்பனையால் கண்டதை பிதற்றிக் கொண்டுள்ளனர்.

இன்றைய 2020 ஆம் நூற்றாண்டின் விஞ்ஞானத்தின் தந்தையராக விளங்கும் பேராசிரியர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், ராபர்ட் ஏ. மில்லிகன் போன்ற உயர் ஞானத் தலைவர்கள் அனைவரும் ஒப்பற்ற பக்திமான்களாக விளங்கியதோடு தற்கால விஞ்ஞானம் மனித வாழ்க்கைக்குப் பெரிய அரணாக விளங்குகிறதென்ற கருத்தும் உடையவர்கள்.

ஆனால், விஞ்ஞானம் என்ற சொல்லின் எழுத்தைக் கூடக்கூட்டத் தெரியாத, நம் ஊர் அறிவு(அரசியல்)வாதிகள் மட்டுமே விஞ்ஞானம் என்பது சமயத்தையும், கடவுளையும் பொய்ப்பிக்கத் தோன்றிய மந்திரக் கோல்' என்று பகுத்தறிவு உடையவன் போன்று நினைக்கிறான். வாய்கூசாது பலவும் பேசுகின்றான்.

ஆனால், இதே பாரத நாட்டில் பிறந்து, பழங்காலத்தில் வாழ்ந்த மணிவாசகர் போன்ற பெரியவர்களும் அன்றைய நாள் வளர்ச்சிக்கு ஏற்ற முறையில் விஞ்ஞான அறிவைப் பெற்றுத் திகழ்ந்தனர். அவர்களுடைய இந்த அறிவு அவர்களுடைய பக்திக்கும் உருக்கத்திற்கும் தடையாக அமையவில்லை என்பது மட்டுமல்லாமல், அவர்களுக்கு அந்த அறிவே அரணாகவும் அமைந்ததைத் தன்னுடைய திருவாசகம் போன்ற பாடல்களில் எடுத்துக் கூறுகின்றார்.

மணிவாசகப் பெருமான் பெற்றிருந்த விஞ்ஞான அறிவு அவருடைய பக்திக்கு இடையூறாக அமையவில்லை.

அதற்கு அத்தாட்சியாகத்தான், அவரது திரு அண்டப் பகுதி என்ற திருவாசகத்தில் உள்ள மூன்றாவது அகவல் நமக்கு சுட்டிக் காட்டுகின்றது.

இப் பாடலினுக்கு விளக்கம் தர வந்த இடைக்காலப் பெரியோர்கள் சிவனது ஸ்தூல, சூக்குமத்தை வியந்தது என்று கூறினார்கள்.

இப் பாடலின் முதல் ஆறு வரிகள் மட்டும் கீழே தரப்படுகின்றன.

**“அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்**

**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**
**இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்**
**சிறிய வாகப் பெரியோன் தெரியின் -** திருவாசகம்-31

**இந்தப் பாடலின் பொருள்:**

அண்டமாகிய பேருலகின் பகுதிகளின் உருண்டை வடிவமான பெருக்கம் அளவிடற்கரிய தன்மையுடையனவாய், வளமிக்க காட்சியுடையனவாய், ஒன்றையொன்று அடுத்து நிற்கும் நிலையினை அளவிட்டுக் கூறப்புகுந்தால் நூறு கோடியின் மேம்பட்டனவாம் என்பதாகும்.

அதாவது, இத்தனைப் பெரிய அண்டம் முழுவதும், வீட்டினுள் நுழைகின்ற சூரியகிரணங்களில் ஒளியில் காணப்படும் சிறிய அணுக்களைப் போல உள்ளது என்று கூறும்படி, அவ்வளவு தூரம் மிகப் பெரியோனாக, பரந்தும், விரிந்தும் உள்ளான் இறைவன் என்கின்றார்.

இந்தப்பாடலில் காணப்பெறும் சில விஞ்ஞான உண்மை களை மட்டும் எடுத்துக்கொண்டு, அவைகள் தற்கால நவீன விஞ்ஞானப் புதுமைகளுடன் எவ்வளவு ஒத்துள்ளன என்பதைக் காண்போம்.

அண்டப்பகுதி என்று மணிவாசகப் பெருமான் கூறியதை இன்று நாம் Universe என்று ஆங்கிலத்திலும், பிரபஞ்சம் என்று தமிழிலும் கூறுகின்றோம்.

அதில் உள்ள '**உண்டைப்பிறக்கம்**' என்பதனை Galaxies என்று கூறுகிறோம். அதாவது விண்மீன் திறள்கள் என்று அழைக்கின்றோம். நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன. என்பதனை "Expanding Universe" என்ற முறையில் இந்த அண்டம் பரந்து, விரிந்து காணப்படுகின்றது என்கிறோம்.

'**அண்டமாகிய பெரும் பகுதியில், நூறு கோடியின் மேலாக உண்டைகள் பெருக்க முற்று விரிந்தன என்கிறார் பெருமான். பக்தர் ஒருவர் தனது பக்தியின் (அன்பின்) மேலிட்டால் கண்களை மூடி தியானத்தில் உட்கார்ந்துக் கொண்டு அளந்தவைகள் அல்ல இவைகள்**' என்பதை நன்கு மனத்தில் உள்வாங்கிக் கொண்டு, கீழ்வரும் விஞ்ஞானிகள் கூறும் நவீன விஞ்ஞான கூற்றைச் சற்றுக் கவனமாகக் காண வேண்டும்.

விஞ்ஞானி ஐன்ஸ்டீனின் கணக்கின்படி இவ்வண்டத்தின் அரைவிட்டம் (radius) 85 கோடி ஒளி ஆண்டுகள்.

இதனை நாம் அறிந்து வைத்துள்ள மைல் கணக்கில் 210-ன் பின்னால், 21 பூஜ்யங்கள் சேர்த்து எழுதி கணக்கிட வேண்டும்.

அதனை கணக்கிட்டுக் கொள்பவர்கள் கணக்கினைப் போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்.

ஒரு வினாடிக்கு 1,86,000 மைல்கள் வேகம் செல்லக்கூடிய சூரிய ஒளியானது அண்டத்தில் ஓரிடத்தில் புறப்பட்டு அதனைச் சுற்றிக்கொண்டு, மீண்டும் புறப்பட்ட

இடத்திற்கு வர 200 கோடி ஆண்டுகள் மனித ஆயுள் தேவைப்படுகின்றது என்றால், இதனைக் கணக்கிட நீங்கள் எத்தனைப் பிறவிகள் அதுவும் மனிதனாகவே பிறக்க வேண்டும் என்று யோசியுங்கள்.

மணிவாசகப் பெருமான் கூறியபடி அண்டப் பகுதியில் உள்ள உண்டைகளின் பெருக்கம் நூறு கோடியின் மேம்பட்டன என்பதை இன்றைய நவீன அறிவியல் ஒப்புக்கொள்வது மட்டுமில்லாமல், அவைகளை எண்ணி முடிக்க முடியாது என்றே கூறுகிறார்கள்.

மணிவாசகப் பெருமானும் நூற்றொரு கோடியின் ஆண்டுகளுக்கு மேற்பட என்று கூறுவதிலிருந்தே, அவைகளை எண்ண முடியாது என்று தன் கருத்தை, அந்த காலத்திலேயே வலியுறுத்தி இருக்கின்றார் என்றால், அவரது விஞ்ஞான அறிவை யோசித்துப் பாருங்கள்.

கணக்கை கவனித்தால் மயக்கம் போட்டு கீழே விழவேண்டிய நிலையில், மணிவாசகப் பெருமான் அதே பாடலின் நான்காவது வரியில் கடைசிச் சொல் நம் வியப்பை இன்னும் மிகுதிப்படுத்துகிறது.

அந்தச்சொல் **‘விரிந்தன’** என்ற ஆழமான பொருளை உடைய சொல்.

மற்ற நாடுகளோடு ஒப்பிடும் பொழுது, நம்முடைய மெய்ஞ்ஞானிகள் வானவியலில் எந்த அளவிற்கு மிகுந்த

அறிவு உடையவர்களாக இருந்திருக்க வேண்டும் என்பது நன்கு புலனாகின்றது.

இதிலே **‘விரிந்தன’** என்ற இந்த ஒரு சொல்லால், கோப்பர்நிகஸ்’ (Copernicus) உலகம் உருண்டை வடிவானது என்று கூறுமுன்பே, நம்முடைய மெய்ஞ்ஞானிகள் அண்டத்தில் உலவும் உலகங்கள் அனைத்தும் உருண்டை வடிவம் உடையன என்று கூறியதைக் காணமுடிகின்றது.

அதனினும் பார்க்க வியப்பானதான அந்த அணு உருண்டை ‘விரிந்தன’ என்று கூறியதில் இருந்து, இன்றைய நவீன விஞ்ஞானம் அண்டம் விரிந்துக் கொண்டே செல்கிறது என்ற முடிவுக்கு வந்துள்ளதை நமக்கு ஞாபகப் படுத்துகின்றது.

“அண்டத்தில் அரைவிட்டம் ஒளி அலைகளை விட வேகமாகப் பெருகிக் கொண்டே செல்லுகிறது. இன்னும் வேகமாகப் பெருக வாய்ப்புகளும் உண்டு. இப்பொழுதுகூட ஓரிடத்திலிருந்து புறப்பட்ட ஓர் ஒளி அண்டத்தைச் சுற்றிவர இயலாதபடி அதன் பரிதி வட்டம் மிகுந்துக் கொண்டே செல்கிறது.”

இங்கு கூறப்படுகின்ற விரிவின் வேகத்தைக் கணக்கிட்டு ஒருவாறு நமக்கு புரிய வைக்க முயற்சிக்கின்றார் நவீன விஞ்ஞானி ஐன்ஸ்டீன்.

“விண்மீன் மண்டலத்தின் உள்ளே இயங்கும் நமது சூரிய மண்டலம் வினாடிக்கு 13 மைல் வேகத்திலும், இவ் விண்மீன் மண்டலம் பால் வெளிக்குள் (Milky Way) வினாடிக்கு 200 மைல் வேகத்திலும் இப் பால் வெளி இன்னும் தூரத்துள்ள மண்டலங்களை காண வினாடிக்கு 100 மைல் வேகத்திலும் போகின்றன. இவை அனைத்தும் வெவ்வேறு திசைகளில் செல்லுகின்றன என்பதே விந்தையிலும் விந்தை”.

“அண்டத்திற்குப் பரிமாணம் என்பதில்லை. ஏன் எனில் அது விரிந்துகொண்டே செல்கிறது. சில ஆண்டுகளாகவே இவ்விரிவை விஞ்ஞானிகள் அறிந்துள்ளனர். இவைகளின் விரிவு வேகத்தைக் கணக்கிட்டே அண்டத்தின் விரிவை அறிகிறோம்”.

அண்டம், அதிலுள்ள உண்டைகள், அவற்றின் விரியும் இயல்பு என்பவைகள் பற்றி, மணிவாசகப் பெருமானார் கூறியதுப் போக, இன்னும் எத்தனையோ உண்மைகளும் கூறப்படுகின்றன.

பருமைக்கு உதாரணமாக இவ்வண்டத்தைக் கூறி, இறைவன் இதனைவிட மிகப் பெரியோன் ஆதலின், அவன் பெருமையை காணக் கற்பனைக் கடங்காத இவ் வண்டமும் அந்த நுண்ணிய அணுவில் அடங்கிய மிகச் சிறியதாய் உள்ளது என்கின்றார்.

அண்டத்தைப்பற்றி அவர் அறிந்திருந்தது போலவே, அணுவைப்பற்றியும் அன்றே அறிந்திருந்தார்.

இவ்விடத்தில் அணுவுக்குத் **'துன்னணு'** (மிகவும் நுண்ணியது) என்ற அடைமொழி ஐந்தாவது வரியிலே சுட்டிக் காட்டப்பட்டுள்ளதையும் கவனியுங்கள்.

இனி மற்றொரு பாடலில், அந்த அணுவும் பிரிந்து, அதனினும் சிறிதாம் தன்மை பேசப்படுகிறது.

இன்று எனக்கருளி என்று தொடங்கும் கோயில் திருப்பதிகம் என்ற அவரது பாடலில் ஏழாவது பாட்டில்,

'**சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்**' என்று பாடியிருக்கின்றார்.

மேலும் '**அணுத்தரு தன்மையில் ஐயோன் காண்க**' (அண்டப் பகுதி - 4) என்றும் கூறுகின்றார்.

ஒரு காலத்தில் மிகச் சிறந்த விஞ்ஞானியாகிய டால்டன் (Hugh Dalton) என்பவர் 'உடைக்க முடியாதது' என்ற பொருளில், இதற்கு "**அணு**" (atom) என்று பெயரிட்டார்.

அதனைத்தான் இன்றைய நவீன விஞ்ஞானம் பொருள் (Matter) தொடக்கமும், முடிவும் இல்லாதது. பொருளை (Matter) படைக்கவும் முடியாது, அழிக்கவும் முடியாது.

பொருளை (Matter) ஆற்றலாக (Energy) மட்டுமே மாற்ற முடியும் என்கின்றது.

அணுவினுள் (Matter) அடங்கி இருக்கும் இவ்வியத்தகு தன்மையைத்தான் மணிவாசகப் பெருமான் அணுத்தரு தன்மையில் **'ஐயோன்'** என்று கூறினார் போலும்.

**'ஐயோன்'** என்ற சொல்லுக்கு மிகச் சிறியவன் என்பது ஒரு பொருள்.

**'ஐ'** வியப்பாகும், என்ற தொல்காப்பியனார் கருத்துப்படி அணுவினுள் வியக்கத்தகு முறையில் மின் அணுவாய், (Electron) பரமாணுவாய் (Proton), நியூட்ரானாய் (Neotron), பாசிட்ரானாய் (Positron) விளங்கும் சக்தி வடிவங்களைத்தான் அன்றே (Energy) அவர் குறிப்பிட்டுள்ளார்.

இந்த சக்தியைத்தான் சாஸ்திரத்தில் ஈஸ்வரன் என்கின்றோம்.

அதாவது, **பிரம்மா, விஷ்ணு, மகேஸ்வரன்** என்று கூறி, முத்தொழில்கள் அவர்கள் வாயிலாக நடைப்பெறுவதாக அஞ்ஞானிகளுக்கு விளக்கப்படுகின்றது.

இனி முக்கூட்டுப் பரிமாணம் உடைய உலகத்தையும் (எல்லா உலகங்களும் இச் சொல்லால் குறிக்கப் பெறுகின்றன) அத்தகைய உலகம் தோன்றி (கற்பனையாக) அழிய இடம்

தருகின்ற ஆகாயத்தையும் ஆசிரியர் மணிவாசகப் பெருமான் அறிந்திருந்தது ஒன்றும் வியப்பல்ல.

'**காலம்**' என்று கூறப்படும் ஒன்றை, இம் மூன்று பரிமாண முடைய உலகத்தோடு தொடர்புபடுத்திக் கூறுவதுதான் வியப்பினும் வியப்பாகும்!

திருவாசகத்தில் 47ஆவது பாடலாக வரும் இப் பாடலைச் சற்றுக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.

**"மேலை வானவ ரும்அறி யாத(து)ஓர்**
**கோல மேஎனை ஆட்கொண்ட கூத்தனே!**
**ஞாலமே! விசும்பே இவை வந்துபோம் காலமே!**
**உனை என்று கொல் காண்பதே?"**

(திருவாசகம் - 5:47).

ஞாலமாகவும், விசும்பாகவும், அதாவது, இந்த உலகமாகவும், ஆகாயமாகவும் என இந்த இரண்டும் தோன்றி மறைதற்குக் காரணமாகவும், நிலைக்களமாகவும் உள்ள காலமே! உன்னை என்று காண முடியும்? என்று மணிவாசகப் பெருமான் கூறும் பொழுது கொஞ்சம் வியப்படையத்தான் வேண்டியிருக்கிறது.

இறைவனைக் காலம் கடந்தவன், "**காலகாலன்**" என்றெல்லாம் கூறுவது மரபு.

ஆனால், ஞாலமும் விசும்பும் வந்துபோதற்குரிய காலம்' என்று கூறுவது புதுமை என்பது மட்டுமல்ல, நவீன விஞ்ஞானி ஐன்ஸ்டீனுக்கு ஆயிரம் ஆண்டுகள் முன்னரே நம்முடைய மெய்ஞ்ஞானி மணிவாசகப் பெருமான் கண்ட உண்மையை ஐன்ஸ்டீன் கண்டதுபோல் அல்லவா இருக்கிறது.

மேலும், என்றும், எப்பொழுதும் உள்ளவனாகிய இறைவனை, இப்பொழுது, இந்த விநாடி அனுபவமாக அறிந்துக் கொண்டேன் என்று கூறுவதும் கூட, காலத்தைக் கடந்துதான் கூற வேண்டுமே ஒழிய, அவனைக் காலத்திற்குள் கொண்டு வந்து அடக்கிவிட முடியாது என்பதையும் அறியவும்.

ஐன்ஸ்டீன் கண்ட காட்சியில் காலத்தில் வந்து போகின்ற ஞாலம் (உலகம்) காட்சியளிக்கிறது.

விஞ்ஞானி தனது தொலை நோக்கி'யின் மூலம் கற்பனைக்கு அடங்காத துரத்தில் இருப்பதாகக் கூறப்படும் ஓர் உலகைக் காணும் பொழுது இன்று இவ்வுலகம் இருக்கும் நிலையைக் காணவில்லை. அவரால் அந்த விஞ்ஞானக் கண்ணோட்டத்தில் காணவும் முடியாது.

அவனுடைய ஒப்புயர்வற்ற அந்தத் தொலைநோக்கி 50 கோடி ஒளி ஆண்டுகட்கு முன் செல்கிறது.

அன்று அந்த உலகம் எவ்வாறு இருந்ததோ அதையன்றோ இன்று காணுகின்றது. காட்டுகின்றது.

உலகில் கல்தோன்றி மண் தோன்றாத அந்த நாளில் அத்தூர உலகில் இருந்து புறப்பட்ட ஒளியன்றோ இன்று விஞ்ஞானியின் தொலை நோக்கியில் பிரதிபலிக்கிறது.

பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் அவ்வுலகம் அழிந்து கூட இருக்கலாம். ஆனால், அவ்வழிவை இன்று நாம் அறிய இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆகும்?

இவற்றை எல்லாம் ஓரளவு உணர்ந்த மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில், **வண்ணந்தான் சேய(து) அன்று வெளிதே அன்று என்றும், அநேகன் ஏகன் அணு அணுவில் இறந்தாய் என்(று) அங்(கு) எண்ணந்தான் தடுமாறி இமையோர் கூட்டம் எய்துமாறு அறியாத எந்தாய்! ...** திருவா- 5 : 29 என்று பாடிச் சொல்வதை, மொழிபெயர்த்தது போல உலகப் பேரறிவாளியான ஐன்ஸ்டீன் கூறும் மொழிகளுடன் ஒப்பிட்டு இதனை அறிய முடிகின்றது.

மணிவாசகப் பெருமான் பாடிய திரு அண்டப்பகுதி திருவாசகத்திலுள்ள நான்கு அகவல்களில் மூன்றாவதாக உள்ள பகுதியாகும்.

திரு அண்டப்பகுதி என்ற பெயர் வரக் காரணம் ஒரு பாடலின் முதலடியை அல்லது அவ்வடியின் ஒரு பகுதியை அத்தொகுப்பு முழுவதற்கும் பெயராக வைக்கும் பழக்கம் பழங்காலத்தில் இருந்தே பழக்கத்தில் இருக்கின்றது.

அந்த முறையைப் பின்பற்றி இப்பெயரை வைத்திருக்கக்கூடும். இத்தலைப்பின் கீழ் எழுதப் பெற்றுள்ள மற்றொரு குறிப்பு ‘சிவனது துல சூக்குமத்தை வியந்தது’ என்பதாகும்.

திருவண்டப் பகுதியின் முதல் ஆறு அடிகளை ஆழ்ந்து பலமுறை சிந்தித்தால், அது வியப்பைத் தருவது உண்மைதான். 19ஆம், 20ஆம் நூற்றாண்டுகளில் விரிவடைந்த விஞ்ஞான அறிவு, எந்த அளவிற்கு இந்த ஆறு அடிகளில் அன்றே அறியப்பட்டுள்ளது என்பதைக் காணும் பொழுது வியப்பு மேலிடுகிறது.

விஞ்ஞானிகள் யூனிவர்ஸ் (Universe) என்று கூறுவதைத் தமிழர்கள் அண்டம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கோப்பர்நிக்கஸ், கலிலியோ போன்ற விஞ்ஞானிகள் முதன்முதலாக இந்தப் பூமி உருண்டையானது என்றும், சூரிய மண்டலத்தை இது சுற்றி வருகிறது என்றும் கூறினர்.

அன்றைய, அந்நாட்டுச்சமய உலகம் (கிறிஸ்துவர்கள்) இதனை ஏற்றுக்கொள்ளாமல் அவர்களுக்குத் தண்டனை வழங்கியது.

பால்வெளியிலுள்ள சூரிய மண்டலத்தைப்போல பல ஆயிரக்கணக்கான மண்டலங்கள் வானிலே இருக்கின்றன என்றும் இன்றைய விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர்.

அது மட்டும் இல்லாமல் இம்மண்டலங்கள், குளத்தில் தோன்றும் அலைகள் போல, எல்லாத் திசைகளிலும் விரிவடைவது போல, விரிந்துகொண்டே செல்கின்றன என்றும், அந்த விரிவின் வேகம், ஒளி அலைகளைவிட அதிகமானது என்றும் கண்டனர்.

விரிந்து செல்லும் இந்த அண்டத்தின் பரிதி வட்டத்தில் (circumference) ஓரிடத்திலிருந்து புறப்பட்ட ஓர் ஒளிக்கற்றை அந்த விளிம்பைச் சுற்றிக்கொண்டு மறுபடியும் புறப்பட்ட இடத்திற்கு வந்து சேர முற்பட்டால் அது இயலாது.

சுற்றிவரும் ஒளியின் வேகம் ஒரு விநாடிக்கு 2,97,600 கிலோமீட்டர் வேகத்தில் செல்கிறது. அப்படியிருந்தும் இந்த ஒளி புறப்பட்ட இடத்தை அடைய முடியாமல் போவதற்கு ஒரேயொரு காரணம்தான் உண்டு. அது, இந்த ஒளி செல்லும் வேகத்தைவிட, அதிகமான வேகத்தில் அண்டத்தின் விளிம்பு விரிவடைந்து கொண்டே செல்கிறது.

இதனை விரிவடையும் அண்டம் (Expanding Universe) என்று விஞ்ஞானம் கூறுகின்றது.

அண்டத்தின் விரிந்துசெல்லும் இந்த இயல்பை மணிவாசகப் பெருமான் '**பிறக்கம்**' என்ற சொல்லாலும், '**விரிந்தன**' என்ற சொல்லாலும் கூறுகின்றார்.

இதிலே கண்கள் என்ற நமது புலன்கள், அதற்குரிய இயல்பான காரியமாக, முதலில் பெரியதாக இருக்கும்

பொருளையே எளிதாகக் கண்டு, அடுத்து அதில் அடங்கியுள்ள மிகநுண்ணிய பொருள்களை காண்பதும் என இருக்கின்றது.

சாதாரண அறிவு உடையவர்கள் இந்தப் பரந்த, பெரிய உலகத்தை மட்டும் மேலோட்டமாகக் கண்டு, அத்தோடு நிறுத்திக் கொள்வர்.

கூர்மையான அறிவு உடையவர்கள் மட்டுமே, இப்பரந்த உலகையும் கண்டு, அதனுள் காணப்படுகின்ற பல்வேறு நுண்ணிய பொருள்களையும் காண்பதோடு நிறுத்திக் கொள்ளாமல், இவற்றிடையே ஏதேனும் தொடர்பு இருக்குமோ? என்ற ஆராய்ச்சியிலும் ஈடுபடுகின்றனர்.

பருப் பொருள்கள் தம்முள் மாறுபட்ட வடிவுடையவை.

ஆயினும் இப் பருப்பொருள்களிடையே ஒரு தொடர்பு இருப்பதைக் கண்டனர் நுண்ணிய அறிவுடைய விஞ்ஞானிகள். இந்த ஆராய்ச்சியில் அறிவு செல்லச் செல்ல பருப் பொருள்களின் தோற்றத்தைச் சிந்திக்கத் தொடங்கினர்.

பல்வேறு கண்ணிற்குத் தெரியாத சூக்ஷுமமான நுண்ணிய பொருட்களின் சேர்க்கையின் மூலம்தான், ஒரு பருப்பொருள் கண்ணிற்குத் தெரிகின்ற ஸ்தூல வடிவம் பெறுகிறது என்பதையும் கண்டனர்.

இதிலே மணிவாசகப் பெருமான் திருப்பெருந்துறையில் திருவருள் பெறுகின்றவரையிலும் தன்னுடைய பொறிகள்,

புலன்கள், கல்வி, அறிவு போன்ற ஏற்றிவைத்துக் கொண்ட அறிவுகளின் உதவியால் இந்த உலகத்தை மற்றவர்கள் போலவே சாதாரணமாகவே கண்டு வந்துள்ளார்.

திருவருள் கிடைத்த பின்னர்தான், இதே கண்களால் சாதாரண ஸ்தூலப் பொருள்களைக் கண்டாலும், அவற்றில் காணப்படும் வேற்றுமைகள் அவரிடமிருந்து மறைந்து, அவைகள் தோன்றுவதற்கு ஆதாரமான அனைத்து மூலக்கூறுகளும் அந்த ஆதி பகவன் முதற்றே உண்டாகின்றது என்று அறிந்து, அந்த பரம்பொருளின் பல்வேறு வடிவங்களே இந்த ஸ்தூல உலகம் என்ற உண்மையை உணர்ந்தார்.

பொதுவாக ஒரு பொருளை சிறியது, என்றும், பெரியது என்றும் கூறுவது, அதன் பக்கத்தில் மற்றொரு பொருளை வைத்து, அதனோடு இதனை ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது மட்டும்தான், அதனைவிட இது சிறியது, இதனை விட அது பெரியது என்று கூறவே முடிகின்றது.

இந்த அடிப்படையில் எல்லையில்லாமல் எங்கும், எதிலும் நீக்கமற நிறைந்துள்ள ஆதியும், அந்தமும் காண முடியாததாய் விரிந்து கொண்டே இருக்கும் அண்டத்தை தன் மனக்கண் முன் நிறுத்திய மணிவாசகப் பெருமானார், இத்தனைப் பெரிய அண்டமும், மிகச் சிறியது என்று கூறும் படியாக, இதனைவிடப் பெரியவனாக ஒரு(இறை)வனை பார்க்கின்றார்.

அதைத்தான் அவர் இந்தப்பாடலிலே கூற வருகின்றார்.

இதனை அப்படியே ‘**பெரியது**’ என்று கூறியிருக்கலாம்.

ஆனால் பெரியதைப் பற்றி விரிவாகப் பேசிய மணிவாசகப் பெருமான், சிறியதற்கும் ஒரு வடிவத்தைக் கொடுக்கின்றார்.

அதுவே '**இல்நுழை கதிரின் துன்னணுப் புரைய**’ என்ற அடியால் விளக்கப் பெறுகிறது.

பொதுவாக கிராமங்களில், தென்னங்கீற்று வேய்ந்த கூரை வீடுகளில், அல்லது ஓட்டு வீடுகளில் வாழ்கின்றவர்கள் அன்றாடம் காணுகின்ற புதுமையான அனுபவம் இது.

சூரியன் மேலே வரவர கீற்றில் காணப்படும் துவாரங்கள் வழியாக, சூரியஒளி வீட்டின் தரையில் படும். பக்கத்தில் இருந்து பார்த்தால் ஒரு நேரிய குழாய்வடிவில் அந்த ஒளிக்கற்றை வீட்டின் உள்ளே காணப்படும்.

கூர்ந்து நோக்கினால், இவ்வொளிக்கற்றையுள் மிகமிகச் சிறிய துகள்கள் மேலும்கீழும், பக்கவாட்டிலும் மிதப்பது கண்ணுக்குப் புலப்படும்.

இங்ஙனம் மிதக்கும் துகள்கள் சிறியதும், பெரியதுமாக இருப்பதையும் காணலாம்.

அத்தகைய மிதக்கும் துகள்களிலேயே மிகமிகச் சிறிய துகளொன்றைக் காணுமாறு நம்மைப் பணிக்கின்றார்.

இது என்ன வேடிக்கை? நான் ஏன் அந்த சிறிய துகளைக் காண வேண்டும் என்று கேட்டீர்களேயானால், அவர் கூற வருகின்ற உண்மையை உணர இதனைத் தவிர வேறு எந்த உதாரணத்தைக் காட்டி உங்களுக்குப் புரிய வைக்க முடியும்?

அந்தக் காலத்தில் அணுவை ஆராயக்கூடிய நுண்ணோக்கிகள் (Microscope) எல்லாம் கிடையாதே!

அத்தகைய கட்புலன், கற்பனை ஆகிய இரண்டுக்கும் அப்பாற்பட்டு விரிந்து கொண்டிருக்கும் இந்த அண்டம், அனைத்து பொருட்களால் ஆன பருமைக்கு எல்லையாகக் காட்டப்பட்டது.

ஒளிக்கற்றையுள் தோன்றும் இச்சிறுதுகள் சிறுமைக்கு எல்லையாகப் பக்கத்தே வைத்துப் பேசப்படுகிறது.

இது என்ன விந்தை! திருவாதவூரர் விஞ்ஞானப் பாடத்தை நமக்குச் சொல்லித் தருகிறாரா?

பின்னர் ஏன் இந்த விளக்கம் தருகின்றார்?

இங்குதான் சற்று நின்று நிதானித்து அறிவுக் கூர்மையுடன் கவனிக்கும் பொழுது, '**தாற்றான் சிறியவாகப் பெரியோன்**' என்ற தொடரின் பொருளைப் புரிந்துகொள்ள முடியும்.

## 17. <u>அணுவும், மூன்று முக்கிய நிகழ்வும்!</u>

இப்பொழுது மூன்று பொருள்கள் இங்கு பேசப்படு கின்றன. கூர்ந்து கவனித்தால் மட்டுமே இதை நன்கு புரிந்துக் கொள்ள முடியும்.

சிறுதுகள் **ஒன்று.**

கற்பனைக்கு அடங்காமல் விரிந்து நிற்கும் பேரண்டம் **இரண்டு.**

சொல், கண், மனம், கற்பனை ஆகிய அனைத்தையும் கடந்து இப்பேரண்டத்தை தன்னுள் ஒரு சிறு துகளாக வைத்துக் கொண்டிருக்கும் இறைவடிவம் **மூன்று.**

இப்பொழுது ஒன்று, இரண்டு, மூன்று என்ற வரிசையில் கண்டால் ஒன்றைவிட ஒன்று பெரியது என்று கூறத் தோன்றுகிறது.

அடுத்து, மூன்று, இரண்டு, ஒன்று என்று திருப்பிப் பார்த்தால் ஒன்றைவிட ஒன்று சிறியது என்று கூறத் தோன்றுகிறது.

இந்த மூன்றையும் வைத்துக் கொண்டு, அனைத்து ஸ்தூல பருப் பொருட்களுக்கும் காரணமான இறைவனின்

பருமைக்கு ஒரு புதிய விளக்கம் தருகிறார் மணிவாசகப் பெருமான்.

இறைவன் எவ்வளவு பெரியவன் தெரியுமா?

இந்த ஊனக் கண்களால் எந்தப் பேரண்டத்தைக் கண்டு இதன் பருமையை எதனாலும் அளவிட முடியாதது என்று கருதுகின்றோமோ, அந்தப் பேரண்டத்தை இறைவனோடு ஒப்பிடும் பொழுது மிக மிகச் சிறியதாகிவிடுகிறது.

எவ்வளவு சிறியது தெரியுமா?

அதாவது, ஒளிக்கற்றையில் காணப்படும் மிக நுண்ணிய துகளைவிட இப் பேரண்டம் சிறுத்து விடுகின்றது.

இதனைப் புரிந்து கொள்வது ஓரளவு கடினமென்பதால் மற்றோர் உதாரணத்தின் மூலம் இதனை மேலும் விளங்கிக் கொள்ளலாம்.

நாம் பயன்படுத்தும் கடுகைவிட, பூசணிக்காய் பெரியது தான். ஆனால் இமயமலையோடு ஒப்பிடும்போது, இதுவரை பெரிது என்று கருதிக் கொண்டிருந்த பூசணிக் காய் அதைவிட மிகச் சிறியதாக சிறுத்துவிடுகிறது.

அவ்வாறே இறைவனோடு ஒப்பிடும் பொழுது இந்த மொத்தப் பேரண்டமும் சிறுத்துத்தான் போய்விடுகின்றது.

ஆனால், அது எவ்வளவு சிறுத்தது என்று ஒப்பிடுவதற்கு ஒன்றைச் சொல்லியே ஆகவேண்டும்.

அதற்காகவே மணிவாசகப் பெருமானார் துன் அணுவைக் கூறுகின்றார்.

இறைவனோடு ஒப்பிடும்பொழுது இப்பேரண்டம் துன் அணு'வைவிடச் சிறியது என்று சொல்வதன் மூலம் இறைவனின் பருமையும், பெருமையும் இங்கு பேசப்படுகிறது.

விஞ்ஞானிகள் இன்றைய நவீன சாதனங்களை வைத்துக் கொண்டு, வானவெளியில் பல்லாயிரங்கோடி கிலோ மீட்டர்களுக்கு அப்பாலும் உள்ள பல்வேறு கோள் மண்டலங்கள் அனைத்தையும் சேர்த்து அண்டப்பகுதி (பிரபஞ்சம்) என்றார்கள்.

ஆனால், அன்றே '**உண்டைப் பிறக்கம்**' என்று மணிவாசகர் கூறுவதைக் காணும் பொழுது, அவரது மெய்ஞ்ஞான அறிவில் விஞ்ஞானம் வெளிப்பட்ட விதம் இன்றுள்ள நாம் வியந்து, புருவங்களை மேலுயர்த்தி மெய் மறந்து நிற்கச் செய்யும் சொற்களாகும்.

விண்ணில் காணப்படும் கோள்களை உண்டை (Sphere) என்ற சொல்லினால் 8 ஆம் நூற்றாண்டிலேயே குறிப்பிட்டது நம்மை மேலும் வியக்கச் செய்கிறது.

இனி ஒன்றனுக்கு ஒன்று நின்று எழில் பகரின் என்று சொல்வது சிந்திக்கத்தக்கது.

விரிந்து செல்கின்றன என்று அவர் கூறியதால், இந்த உண்டைகள் எவ்விதக் கட்டுப்பாடும், சட்டதிட்டமும் இன்றித் தறிகெட்டு ஒடுகின்றன என்று பொருள் கொள்ள ஏதுவாக '**பிறக்கம்**' என்ற சொல் இருப்பதினால், அதனை மறுத்து இவ் விரிவிலும் ஒரு வரைமுறை உண்டு என்பதே இப்பாடலில் அவர் கூற வருகின்ற பொருள் ஆகும்.

ஒன்றனுக்கொன்று என்றதால் ஒரு உண்டையை அடுத்து அதைச் சுற்றியுள்ள ஏதோ ஒரு கோணத்தில் மற்றொரு உண்டை விரிந்தாலும், இவை இரண்டின் இடையே உள்ள கோணம் மாறாமல் இருக்கும் அழகை '**எழில்**' என்ற சொற்களால் குறிக்கின்றார்.

இறைவனின் பெருமையை அறிவித்தற்கு மணிவாசகப் பெருமானார் இவற்றைக் கூறினார் என்றாலும், இன்றைய நவீன விஞ்ஞானத்தின் வாயிலாக 19 ஆம் நூற்றாண்டில் அறியப்பட்ட பல விஞ்ஞானப் புதுமைகள் அவரது பாடல் வரிகளில் காணப்படுகின்றன.

அண்டம், உண்டை, பிறக்கம், விரிந்தன, துன்அணு ஆகிய சொற்களே இந்நூற்றாண்டின் விஞ்ஞானக் கண்டுப் பிடிப்புக்களை அறிவிக்கும் அன்றைய அறிவியல் சொற்கள் ஆகும்.

மணிவாசகர் காலத்தில் **'அணு'** என்ற சொல் பல பொருள்களில் வழங்கிய ஒரு சொல்லாகும்.

கண்கள் என்ற புலனுக்கு அறிமுகமாகும் சிறு துகள், மற்றும் கருத்தால் மட்டும் காணக்கூடிய நுண்பொருள் என்பவையும் 'அணு' என்ற சொல்லாலேயே அந்நாளில் குறிக்கப்பெற்றன.

இதில் வியப்பு என்னவென்றால், இன்றைய நவீன விஞ்ஞானம் 19ஆம் நூற்றாண்டில் வைக்கப்பட்ட **"அணு"** (atom) என்ற பெயர் சொல், எந்தப் பொருளில் வழங்குகிறதோ அந்தப் பொருளில் அன்றே அணு என்று அவர் கூறியுள்ளது அவரது விஞ்ஞான அறிவை வெளிப்படுத்துகின்றது அல்லவா.

இன்றுகூட அணுவை யாரும் சாதாரண கண்களால் கண்டதில்லை.

மிகச் சக்திவாய்ந்த மின்னியல் பெருக்காடி (Electron Microscope) யின் மூலம்கூட அணுவைப் பார்க்க முடியாது. அப்படியானால் சாதாரண மனிதர்கள், அணுவின் வடிவை எவ்வாறு கருத்தில் கொள்ளமுடியும்.

மணிவாசகர் காட்டிய **'துன்னணுப் புரைய'** என்ற உவமை அணுவைப்பற்றி அறிந்து கொள்ளப் பேருதவி புரிகின்ற தல்லவா!.

**தெரியின் வேதியன் தொகையொடு மாலவன்**

**மிகுதியும் தோற்றமுஞ் சிறப்பும் ஈற்றொடு**

**புணரிய மாப்பேர் ஊழியும் நீக்கமும்**

**நிலையும் சூக்கமொடு துலத்துச் சூறை**

**மாருதத் தெறியது வளியிற் கொட்கம்**

**பெயர்க்குங் குழகன்..... (6-12)**

சாதாரண உலகியல் மனிதர்களாகிய நாம் விண்ணினை அண்ணாந்து மேலே பார்க்கும் பொழுதெல்லாம் உண்டைகள் நூற்றொரு கோடியின் மேலாகக் காணப்பெற்று விரிந்து செல்கின்றன என்பதை அறிகின்றோம்.

நம்மையும் அறியாமல், இவற்றைப் படைத்தவர் யார்? அந்தரத்தில் இவற்றை நிறுவியவர் யார்? பல யுகங்களாக இவை இருந்து வருகின்றனவே இவற்றைக் காப்பவர் யார்? காலப்போக்கில் இவைகள் அழிந்து விடுகின்றனவே இவற்றை அழிப்பவர் யார்? போன்ற கேள்விகள் இவற்றைக் காணும் நம் மனத்தில் உதிப்பது இயல்பே.

இதற்கு விடை கூறுவதுபோலப் பின்வரும் தொடர்கள் அமைந்து மலரிடை வாழும் நான்முகனும், திருமாலும் முறையே இப்பிரபஞ்சத்தைப் படைத்தலையும், காத்தலையும் செய்கின்ற கர்த்தாக்கள் ஆவர் என்கின்றார்.

பிரபஞ்சத்தில் காணப்படும் பல்வேறு உண்டைகளும் இவ்வுலகம் போன்ற பல்வேறு உலகங்கள் ஆதலின் அவற்றைப் படைத்தல், காத்தலாகிய இருதொழிற்கும் நான்முகனும், திருமாலும் தேவைப்பட்டனர்.

'**ஊழி**' என்று கூறப்படுவது ஒரு குறிப்பிட்ட உண்டை மறைவதற்குரிய காலமாகும்.

அந்த உண்டையைப் பொறுத்தமட்டில் அதிலுள்ள நிலையியல் பொருள்கள், இயங்கியல் பொருள்கள், உயிர்கள் ஆகியவை மட்டும் அழிவதை ஊழி (பிரளயம்) என்றும், அதுவே அவற்றைப் படைத்த நான்முகன் மற்றும் அவைகளை காத்த திருமால் ஆகியோரும் சேர்ந்து அழிவதை மாப்பேருழி (மகாப் பிரளயம்) என்றும் மணிவாசகர் இந்த பாடல்களில் கூற வருகின்றார்.

ஒவ்வோர் உண்டைக்கும் (Universe) ஒரு நான்முகனும், ஒரு திருமாலும் உண்டு என்பது சைவர்கள் கொள்கை.

அந்த உண்டையோடு அவர்களும் அழிதலின் அவற்றைக் கூறவந்த திருநாவுக்கரசரும், நூறு கோடி பிரமர்கள் நொந்தினார் ஆறு கோடி நாரயணர் அங்ஙனே ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர் ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே (திருமுறை 5-100-3) என்று பாடிச் செல்கிறார்.

விண்ணில்காணும் உண்டைகள், அவற்றில் உள்ள உயிர்கள், அவற்றைப் படைத்துக் காக்கும் நான்முகன், நாரணர்

போன்ற அனைவரையும் சூறாவளிக் காற்றில் எறியப்படும் பொருள்களைப்போல மாப்பேர் ஊழியில் (பேரழிவு என்ற மகாப்பிரளயத்தில்) அழிக்கின்றவன் "**இறைவன் ஒருவனே**" என்கின்றார்.

இவ்வாறு கூறியதால் மும்மூர்த்திகள் என்ற எண்ணம் தோன்றவே, அழிக்கும் செயலைச் செய்கின்ற உருத்திரன் பற்றி என்ன கூறுகிறார் என்ற சிந்தனை மனதில் தோன்றுமல்லவா?

அந்த வினாவிற்கு விடை கூறுவதுப் போன்று, உருத்திரன் என்ற தெய்வத்தைக் கருதாமல், அழிக்கின்றவனும் இறைவன் ஒருவனே என்ற கருத்தைப் பேசுகிறார்.

அதாவது, **'கரப்பவை கருதாக் கருத்துடைக் கடவுள்'** என்றமையும் பாடல் வரிகளில், தனக்கு ஆற்றல் இருக்கின்றது என்ற காரணத்தால் தன் விருப்பம் போல அழித்தல் தொழிலைச் செய்யாமல், உயிர்கள் ஒய்வு பெறவேண்டிய காலத்தை அறிந்து அவற்றை அழிக்கின்றான் என்பதாம்.

ஆறுவகைச் சமயம் என்று பேசப்பெறும் சமயங்கள், வெவ்வேறு பெயர்களில் தத்தம் தெய்வங்களைக் கூறினாலும், அப் பெயர்கள் அனைத்திற்கும் இடந்தந்து நிற்பவன் சிவனாகிய கிழவோன் (தலைவன்) என்கின்றார்.

அதாவது, அறுவகைச் சமயத்தோர்க்கும் தலைவனாக உள்ள இக்கிழவோனுடன் ஒப்பிடும்பொழுது தேவர் உலகத்தில்

உள்ளவர்கள் (விண்ணோர்பகுதி) புழுவுக்கே ஒப்பார்கள் (கீடம் புரையும்) என்கிறார் மணிவாசகர்.

நாள் தொறும் அருக்கனில் சோதி அமைத்தோன் திருத்தகு மதியில் தண்மை வைத்தோன் திண்திறல் தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர் வானில் கலப்பு வைத்தோன் மேதகு காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ் நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட மண்ணில் திண்மை வைத்தோன் என்றுளன்று எனைப்பல கோடி எனைப்பல பிறவும் அனைத்து அனைத்து அவ்வயின் அடைத்தோன்..... (19-28).

என்ற இந்த பாடல் வரிகளில் அவர் கூறவருவது, சூரியனிடத்து ஒளியை வைத்தவனும், அழகிய - சந்திரனிடத்துக் குளிர்ச்சியை வைத்தவனும், வலிமை பொருந்திய அக்கினியினிடத்து வெப்பத்தை வைத்தவனும் நிலைப் பெற்றுள்ள ஆகாயத்தினிடத்து தம்முள் மாறுபடும் ஏனைய நான்கு பூதங்களும் தங்குமாறு செய்தவனும், சிறப்புப் பொருந்திய காற்றினிடத்து இயக்கத்தை வைத்தவனும், நீரினிடத்து இனிய சுவையை வைத்தவனும், பூமியினிடத்து செறிவை வைத்தவனும் என்று கூறும் முறையில் ஒவ்வொரு பொருளும் ஒவ்வோர் இயல்பைப் பெற்று விளங்குமாறு செய்தவன் இறைவனே என்கின்றார்.

பொறி, புலன்களால் உணரத்தக்கவை நான்கு பூதங்களே ஆதலால் அவ்வாறில்லாத ஆகாயம் என்ற ஐந்தாவது பூதம் இல்லை என்பாரை மறுப்பது போல, ‘**பொய்தீர் வானம்**’ என்றார்.

அதாவது, தம்முள் மாறுபடும் தீ, நீர், காற்று, நிலம் முதலிய நான்கு பூதங்களும் தங்குமிடம் ஆகாயமே என்ற கருத்தைக் ‘**கலப்பு வைத்தோன்**’ என்ற பாடல் வரிகளில் குறித்தார்.

அத்தகைய இந்த நான்கு பூதங்களும் ஊழிக்காலத்தில் (பிரளயத்தில்) தம்முடைய தனித் தன்மையை இழந்து ஒன்றுள் ஒன்று கலந்து, ஐந்தாவது பூதமாகிய ஆகாயத்தினிடம் தங்கி விடுகின்றன என்பது இன்றைய நவீன விஞ்ஞானமும், பல்வேறு சமயங்களும் ஏற்றுக்கொண்ட கொள்கையாகும்.

## 18. அனைத்தும் முழுமை

இந்த இவரது பாடல் வரிகள் நமக்கு உணர்த்த வருகின்ற உண்மை என்ன?

பிரபஞ்சத்தைப் படைப்பவன், காப்பவன் ஆகிய இருவரையும் நியமித்து பேரூழியில் அவர்களையும் சேர்த்து அழித்துவிட்டு, தான் ஒருவனாய் நிற்பவன் இறைவனே என்ற கருத்தில் அவர் கூறவருவது என்ன?

அதாவது, இங்கு படைப்பு, இருப்பு, அழிவு என்ற எல்லாமே அந்த ஏக இறைவனின் லீலா விநோதம் என்பதை அறிந்து, இதுவரை கற்றுக் கொண்ட சாஸ்திரங்கள் கூற வருகின்ற **ப்ரஹ்மம்** என்ற ஒன்றையே சமய உலகம் பலப்

பெயர்களில் அழைத்துக் கொண்டு, பல தலைவர்களாக இறைவனை உருவத்தில் வடித்துக் கொண்டு மக்களைக் குழப்பி வருகின்றது.

இருக்கின்ற அந்த ஒரே பொருள், அதாவது பரம்பொருள் என்பது, நிர்குண சொரூபமாக ஆகாய வடிவத்தில் காணப்படுகின்றது.

அந்த ஆகாய வடிவம் என்பது "**அணு**" வடிவம் எனும் பொழுது, அதை சாதாரண மனிதர் களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள இந்த ஐந்து புலன்களில் ஒன்றான கண்களின் வாயிலாக காண்பது என்பதும் முடியாது.

எனவே, அறிந்துக் கொண்ட சாஸ்திரத்தின் வாயிலாக, அடைந்த ஞானத்தைக் கொண்டு, "**நான் ப்ரஹ்மம்**" என்று நாமாக நினைத்துக் கொண்டு, சும்மா இந்த உடலை சுகமாக வைத்துக் கொண்டு, காலத்தைக் கழிப்பதைக் காட்டிலும், கிடைத்த இந்த பரு உடலைக் கொண்டு மேலும் பல உண்மைகளை அறிய முற்படும் பொழுது, அந்த பரம்பொருள் என்ற ஒன்றே, இந்த பிரபஞ்சமாக பருமை அடைந்துள்ளது.

அதாவது. ஒரு பரமாணு, பல்வேறு அணுக்களாகப் பிரிந்து, அதன் பல்வேறு மூலக்கூறுகளின் சேர்க்கையினால், ஒரு பருப்பொருள் வடிவத்தைப் பெற்று, நம் சாதாரண கண்ணிற்குத் தெரிவதாகப் பெரிதாகத் தோன்றுகின்றது.

அத்தகைய தோற்றமே நாம் காணும் இந்த உலகம் என்கின்ற பொழுது, இதை அந்த பேரணுவுக்கு வேறாக பார்க்காமல், அதனுள் இருக்கின்ற பல்வேறு உப அணுக்களே உருவத்தில் இவ்வாறு காட்சியாகின்றது என்பதை அறிந்து, அவைகளை வெறுக்காமல் ஏற்றுக் கொண்டு, அத்தகைய அணுக்களின் திரட்சியினால் உண்டான பூத உடல்களை உதாசீனப்படுத்தாமல், நேசித்து, பராமரித்து, அவைகள் அழிவுக்கு உட்படும் வரையும், ஒன்றை ஒன்று ஆதரித்து வாழ்வதே ஆறறிவு படைத்த மனித சமுதாயத்தின் மகத்தான பணி.

இதை எடுத்துக் கூறுவதற்காகவெ பல்வேறு ரிஷிகளும், சித்தர்களும் இந்த உலகத்திற்கு வந்து, இந்த உன்னதமான விசயத்தை விளக்கியுள்ளனர்.

ஆனால், இந்த பாமர மனிதனோ, மனிதப் படைப்பின் மகத்துவம் அறியாமல், படித்த விசயங்களை சரியாக உள் வாங்காமல், உதவாக்கரை புத்தியுடனேயே இந்தப் புவியில் வீணாய் வாழ்ந்து, வந்த வழி தெரியாமல், சொந்த சொரூபம் அறியாமல், சும்மா இருப்பதே சுகம் எனக் கருதி, இந்த மண்ணில் வீணாய் மடிகின்றான்.

ஆகவே, சாஸ்திரத்தைக் கற்று, அது கூறவருகின்ற, விசயங்களை நன்கு அறிந்துக் கொண்ட நாம் எப்படி நடைமுறைக்கு வரப்போகின்றோம்? என்பதை இனியாவது நன்கு யோசித்து, நாம் வந்த வழி அறிந்து, அவ்வாறே செல்லும் வழி தெரிந்து, இவைகளைச் சரியாகப் புரிந்து,

சகலருக்கும் இதை கொண்டு சேர்க்கும் பொருட்டு, இதில் அனுபவமாகத் தேர்ந்து, ஆம்! அந்த அணுவே "**நான்**". அந்த '**நானே பூரணம்**' என்பதை முழுமையாக அறிந்து, அதன் வாயிலாக அடைவதே பிறவாப் பெருநிலை என்கின்ற "**ஜீவன்முக்தி**" எனப்படும்.

**ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே |**
**பூர்ணஸ்ய பூர்ண மாதாய பூர்ண மேவா வசிஷ்யதே ||**

**ஓம் சாந்தி சாந்தி சாந்தி:**

அதுவும் முழுமை இதுவும் முழுமை. முழுமையில் இருந்து முழுமையை எடுத்த பின்பும், முழுமையே எஞ்சி உள்ளது. இவ்வாறு ப்ரஹ்மம் மாறுபடாதவராக உள்ளார். முழுமைத் தன்மையில் இருந்து குறைவு படுவதில்லை. எனவே, முரண்பாடு இல்லாமல், உடல், மனம், ஆத்மா என மூன்றிலும் அமைதி உண்டாகட்டும்.

**ஓம் சாந்தி சாந்தி சாந்தி:**

**ஓம் தத் சத்!**



உணர்வு மையம் விழிப்படைய வேண்டுமானால், தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்ற, இருமைகள் அற்ற அபேத அன்பே, உண்மையான தூய அன்பு. அந்த அன்பு வெளிப்படுவதே ஆன்மாவின் நேரடி அனுபவம்.

அது நம்முடைய இயல்பு, அது நம்முடைய சொரூபம். அது நம்முடைய உணர்வு. அது நம்முடைய அறிவு.